14974
2-6

# சிறுவர் சிவஞானம்



கோவை கிழார்

A NO: 14974

நூற்றாண்டுவிழா நினைவு வெளியீடு

2-6

# சிறுவர் சிவஞானம்


KOVILOOR ANDAVAR
A. No. 14974
LIBRARY, KOVILOOR

கோவை கிழார்
சி. எம். ராமச்சந்திரன் செட்டியார் பி. ஏ., பி. எல்.

நூற்றுண்டு நினைவு வெளியீடு

2-6

## நூலின் நுழை வாயில்...

கோவை கிழார் சமய மகாநாடுகள் பலவற்றில் கலந்து கொண்டு சிவஞான போதம் பற்றி சொற் பொழிவு ஆற்றியுள்ளார். சைவ சித்தாந்த மகா சமாஜத் தின் செயலாளராகவும் சமாஜம் நடத்திய 'சித்தாந்தம்' மாத இதழின் ஆசிரியராகவும் இருந்து, பல கட்டுரை களையும் எழுதிப் பதிப்பித்துள்ளார்.

பிற சமயத்தார் தமது சமயக் கொள்கைகளைச் சிறுசிறு நூல்களாக எளியநடையில் அச்சிட்டு வழங்கிப் பொது மக்களிடையே தமது சமயத்தைப் பரப்பி வருவதைப் பார்த்து, நம் சமயத்தாரும் இங்ஙனம் செய்ய வேண்டு மென சிவஞான போதத்தைச் சிறுவர்களின் உரை யாடலில் வைத்து எளிய நடையில் பலவகை உதாரணங் களையும் எடுத்துக் காட்டி இந்நூலை இவர் ஆக்கியிருக் கிறார்.

இந்நூலில் சிவஞான போதக் கருத்தைச் சூத்திர வரிசை யாக, அதிகரணப் பாகுபாட்டு வரிசையாக கோவை கிழார் சொல்லிச் செல்கிறார்.

பெரும்பாலும் தன் அனுபவமாகவே இந்நூலை ஆக்கி யுள்ளார். இந்நூலில் உயிரைப் பற்றிக் கூறுகின்ற சில இடங்களில் ''நான்'' என்னும் சொல்லையும் பயன்படுத்தியுள்ளார்.

சிவஞான போதக் கருத்துக்களை அறிந்து கொள்வதற்கு எளிய உரைநடையில் நூல் ஒன்றும் இல்லையே என்ற குறை பொதுவாகப் பலரிடம் இருந்து வருகிறது. என்றாலும், மெய்கண்டார் காலம் முதலே சைவ சித்தாந்தக் கருத்துக்களை எளிமைப்படுத்திப் பரப்பும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு வந்திருக்கிறது.

சிவஞான போதத்திற்கு விளக்கவுரையாக மெய் கண்டாரின் மாணாக்கர் அருணந்தி சிவத்தினால் 'சிவ ஞான சித்தியார்' என்ற நூல் செய்யப்பட்டுள்ளது.

மற்றொரு மாணாக்கராகிய திருவதிகை மனவாசகங் கடந்தாரால் சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகளை அட்டவணைப்படுத்திக் காட்டும் 'உண்மை விளக்கம்' என்னும் நூல் எழுதப்பட்டுள்ளது.

இதே அருணந்தி சிவத்தினால் எழுதப்பட்ட 'இருபா இருபஃதும்', உமாபதி சிவத்தினால் எழுதப்பட்ட 'வினாவெண்பாவும்' சைவ சித்தாந்தக் கொள்கை களைத் திறனாய்வு முறையில் விளக்குவன ஆகும்.

மேலும் உமாபதி சிவம் எழுதிய நூல்களான ''திருவருட் பயன்'', ''போற்றிப் பஃறொடை'' ஆகியவை சைவ சித்தாந்தக் கொள்கைகளைச் சுருக்கமாக விளக்குவன. இதேபோல இவர் எழுதிய 'சங்கற்ப நிவாகரணம்' என்னும் நூல், ஏனைச் சமயத்தார் நோக்கில் வைத்துச் சைவ சித்தாந்தக் கொள்கைகளை விளக்குவன ஆகும்.

ஆனால் இவையெல்லாம் செய்யுள் நடையில் இருப்பது ஒரு பெருங் குறையாகும்.

திருவாவடுதுறை ஆதீனத்தில் பண்டார சந்நிதிகளுக்குப் பணிவிடை புரியும் தவசிப் பிள்ளை சைவ சித்தாந்த அடிப்படை உண்மைகளைப் பற்றி 'பூப்பிள்ளை அட்டவணை' என்று நூல் செய்திருக்கிறார்.

ஆறுமுக நாவலர் சிறுவர்களுக்காக 'சைவ வினா விடை' என்னும் பெயரில் இரண்டு பகுதிகளாக நூல் எழுதி இருக்கிறார்.

தருமபுர ஆதீனம் 'சித்தாந்தத் தெளிவியல்', 'சைவ சித்தாந்த வினா விடை' ஆகிய நூல்களை வெளியிட்டு உள்ளது.

சைவ சித்தாந்த சமாஜம் நடத்திய 'சித்தாந்தம்' என்னும் மாத இதழில் 'சித்தாந்தப் பொன்மொழி' முதலான கட்டுரைகள் தொடர்ந்து எழுதப்பட்டன.

இங்ஙனம் சைவ சித்தாந்தக் கொள்கையை எளிய நடையில் பலரும் எழுதி உள்ளனர். இவ்வரிசையில் இடம்பெறும் சிறப்பான நூல் நமது கோவை கிழார் எழுதிய 'சிறுவர் சிவஞானம்' ஆகும்.

இந்நூலை எழுதி முடித்ததும் தமது படைப்பைப் பற்றிய கருத்தினை அறிந்து கொள்வதற்காகத் தம் நண்பர் பலருக்கு இதனை கோவை கிழார் அனுப்பி வைத்தார்.

அவர்களுள் திருவொற்றியூர் ஆர். சண்முகசுந்தரம் செட்டியார் என்பவர் இந்நூலில் பல இடங்களில் திருத்தம் செய்து இதற்கு 'சிறுவர் சிவஞானம்' என்று

பெயரிடலாம் என்று ஒரு கடிதமும் எழுதியுள்ளார். எனவேதான் இந்நூல் 'சிறுவர் சிவஞானம்' என்று பெயர் பெறுகிறது.

இவருடைய நூற்றாண்டு விழா நடைபெறும் இந்த ஆண்டில், பேரூர் ஆதீனம் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியில் பாதுகாத்து வைக்கப் பட்டிருக்கும் இவரது கையெழுத்துத் தொகுப்பில் உள்ள நூல்கள் மற்றும் கட்டுரைகள் ஆகியவற்றுள், சிலவற்றையாவது வெளியிடும் முயற்சி மேற்கொள்ளப் பட்டது. அவ்வாறு வெளியிடப்பட்ட கோவை கிழாரின் சிறந்த நூல்களுள் இதுவும் ஒன்று.

சிவஞான போதக் கருத்தினை விளக்கிக் கோவை கிழார் எழுதிய இந்நூலினை ஒரு சில சிறுவர்களேனும் படித்துச் சைவ சித்தாந்தக் கொள்கையினை சிறிதள வேனும் உணர்ந்து கொள்வார்கள் என்பதே கோவை கிழாரின் எதிர்பார்ப்பு. சிறுவர்கள் மட்டுமல்லாமல் பெரிய வர்களும் இதனைப் படித்து இன்புறலாம். ●

# நூலினைப் பதிப்பித்து உதவியவர்



அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம்

இராமலிங்கர் பணிமன்றத்தின் சார்பில் தமிழ் இசை விழாக்களையும், சன்மார்க்கப் பணிகளையும் தமிழகத்தில் சிறப்புறச் செய்து வருகின்ற அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் கோவை கிழாரிடத்து அளவற்ற பற்றும் மதிப்பும் கொண்டிருப்பவர். அவர்கள் இந்நூலுக்கு முழுப் பொருளுதவியும் வழங்கி வெளியிட்டு உதவி உள்ளார்கள்.

கொங்கு நாட்டின் பெருமைகளையும் கொங்கு நாட்டுத் தமிழ் அறிஞர்களின் சிறப்பினையும் உலகம் போற்றும்

வகையில் வெளிப்படுத்திட வேண்டும் என்பது இவருடைய பேரவா ஆகும்.

ஆங்கில மொழி வழியாகக் கற்பிக்கப்படும் மழலையர் பள்ளிகளினால் தமிழ் மொழிக்கும் தமிழ்ப் பண்பாட்டிற்கும் ஏற்பட்டு வருகின்ற சீரழிவுகளை விளக்கி, இவர் பேசாத மேடையோ நாளோ இல்லையென்றே கூறலாம்.

அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்களின் தமிழ்ப் பண்பாட்டுப் பற்றுதலை உணர்ந்தே மொரீஷியஸ் நாடு தனது நாட்டு சிறப்புப் பண்பாட்டுத் தூதுவராக இவரை அண்மையில் நியமித்துள்ளது. ●

# நூலினை உருவாக்கி உதவியோர்



பேரூராதீனம்
தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்

பேரூராதீனம் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் இந்நூற் பிரதியை முழுவதுமாகப் பார்வையிட்டுச் சில திருத்தங்களையும் கூறி ஆசி வழங்கி அருளினார்கள்.

இந்நூலைக் கோவை கிழாரின் கையெழுத்துப் பிரதியிலிருந்து பெயர்த்தெழுதுவதற்கும் குறிப்பு எழுதிச் சேர்த்த பின்னர் பதிப்புக்குக் கொடுக்கும் வகையில் செம்மையாக எழுதுவதற்கும் உதவி புரிந்தவர் முதுகலை மாணாக்கியர் செல்வியர் க.அரங்கநாயகியும், விரிவுரை யாளர் திருமதி வே. செல்லாத்தாள் என்பவரும் ஆவர்.

இந்நூலைப் பெயர்த்தெழுதும் போதும் அடிக்குறிப்பு எழுதும் போதும் நூலின் பல பகுதிகளைப் படித்துப் பார்த்துத் தமது கருத்துக்களைக் கூறித் தெளிவுபடுத்தி உதவிய பேராசிரியர்-டாக்டர் ந. இரா. சென்னியப்பன் பேராசிரியர் டாக்டர் ந. முத்துக்குமாரசாமி ஆகிய இருவருமாவர்.

அச்சிடுவதற்குரிய வகையில் இந்நூலின் கையெழுத்துப் பிரதியைத் தேடி எடுத்து, பெயர்த்தெழுதும் பணி யினையும் குறிப்பு எழுதும் பணியினையும் அவ்வப் பொழுது உடனிருந்து தூண்டி ஊக்கமூட்டியவர் விரிவுரையாளர் செல்வி பொ. சரசு ஆவார். இந்நூல் வெளிவருவதற்குக் காரணமானவர்களில் இவரும் ஒருவராவார்.

இந்நூற் செய்திக்குப் பொருத்தமான மூல நூற் பகுதியைக் குறிப்பில் எழுதிச் சேர்க்கும் பணியினைத் தவத்திரு சாந்தலிங்க அடிகளார். தமிழ்க் கல்லூரி முதல்வர் டாக்டர் வையாபுரி அவர்கள் செய்து உதவினார். இதன் பொருட்டு அவர் இந்நூலைப் பல முறை படித்துப் பார்த்து மூல நூலுடன் இணைத்துச் சிந்தித்து முயன்று குறிப்பு எழுதி உள்ளார். ●

# நன்றியுரை

கல்வெட்டு ஆய்வாளரும் சமய சிந்தனையாளருமான கோவை கிழாரின் நூற்றாண்டு விழாவினை சிறப்பாகக் கொண்டாட பேரூர் தமிழ்க் கல்லூரியினர் விரும்பினர். இதற்காக, தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடத்தின் தலைவர் தவத்திரு இராமசாமி அடிகளார் அவர்கள், கோவை கிழாரின் மகன் திரு இரா. மகாதேவன் பி. இ., மற்றும் டாக்டர் ப. உருத்திரமணி, திரு ஈ. சுந்தரம் ஆகியோருடன் கலந்துரையாடி, சைவத்திரு வீ. கோ. வீரண்ணச் செட்டியார் அவர்களைத் தலைவராகவும், திரு கே. பழனிச்சாமி பி. இ., டாக்டர் செல்வி பெ. சரசு ஆகியோரை செயலாளர்களாகவும், திரு கே. வி. கிருஷ்ணராஜ் பி. இ., அவர்களைப் பொருளாளராகவும் கொண்ட கோவை கிழாரின் நூற்றாண்டு விழாக் குழு ஒன்றினை உருவாக்கி உதவினார்கள். இதன் தொடக்க விழா 1988ல் நிகழ்ந்தது.

இவ்விழா நினைவாக பேரூர் தமிழ்க் கல்லூரியில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ள கோவை கிழாரின் கையெழுத்துப் பிரதிகளில் சிலவற்றை நூலாக வெளியிட டாக்டர் ம. ரா. போ. குருசாமி அவர்களைத் தலைவராகக் கொண்ட பதிப்புக் குழு ஒன்றும் உருவாக்கப்பட்டு பல்வேறு அமைப்புகளின் பொருளுதவியால் ஏழு நூல்கள் முன்பு வெளிவந்தன. அருட்செல்வரின் பொருளுதவியால் இந்நூல் எட்டாவதாக வெளிவருகிறது.

இந்நூலுக்கு பொருளுதவி வழங்கிய அருட்செல்வர் அவர்களுக்கும், நூலினை உருவாக்கித் தந்த தவத்திரு அடிகளார் அவர்களுக்கும், தமிழ்க் கல்லூரி ஆசிரியர்களுக்கும் அச்சிட்டுக் கொடுத்த நந்தி அச்சகத்தாருக்கும் நூற்றாண்டு விழாவினை சிறப்புற நடாத்திக் கொடுக்க துணை நின்ற அன்பர்களுக்கும் எமது உளமார்ந்த நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம்.

கோவை

1-2-90

**நூற்றாண்டு விழாக் குழுவினர்**

## கோவை கிழார் நூற்றாண்டு நினைவு விழா வெளியீடுகள்

| | நூல் | வெளியீட்டாளர் | விலை ரூ. |
|---|---|---|---|
| 1. | கொங்கு நாட்டு வரலாறு | தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரி, பேரூர், கோவை-641 010 | 45-00 |
| 2. | கோவை கிழார் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம் | நூற்றாண்டு விழாக்குழு | |
| 3. | திருக்குறளில் ஓர் அரிய கருத்து | பேரூர் புலவர் பேரவை பேரூர், கோவை-10 | 10-00 |
| 4. | உலகப் பெரியோர்கள் | தேவாங்கக் கல்விக் கழகம், கோவை-2. | 20-00 |
| 5. | திரு வி. க வும் யானும் | ஸ்ரீ சுவாமி விவேகானந்தர் இல்லம், கோவை-641 001 | 26-00 |
| 6. | திருப்பருப் பத யாத்திரை | நூற்றாண்டு விழாக்குழு கோவை-641 001 | 15-00 |
| 7. | தமிழ் அரங்கு | பேரூர் புலவர் பேரவை பேரூர், கோவை-10 | 9-00 |

உ

கடவுள் துணை

# நூலாசிரியர் முன்னுரை

சிவஞானபோதம் முதலாகிய சமய ஞான நூல்கள் மிகக் கடினம் என்பர். முதியவர்களும் அறியவொண்ணு இருப்புக் கடலையை ஒத்தன என்பர். அவைகளில் கண்ட ஞானத்தைச் சிறுவர்களும் குழந்தைகளும் அறிய முடியுமா எனக் கேட்பர். அறிய முடியும் என்று இந்த இச்சிறு நூல் கூறுகிறது. கதைகள், உதாரணங்கள் மூலமாகச் சொன்னுல் எந்தச் சிறு குழந்தையும் அறிய முடியும் அல்லவா? அம்முறையினையே இந்நூல் எடுத் தாளுகிறது. படித்துப் பின் முடிபு கூறுக.

14-11-1946

கோவை கிழார்

முதற்பதிப்பு : 1990

நூற்பெயர் : சிறுவர் சிவஞானம்

நூலாசிரியர் : கோவை கிழார்

பதிப்பாசிரியர் : தவத்திரு சாந்தலிங்க ராமசாமி அடிகளார்

வெளியீடு : கோவை கிழார் நூற்ருண்டு விழாக் குழு

பொருளுதவி : அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம்

ஆண்டு : பிப்ரவரி 1990

அச்சிட்டோர் : நந்தி அச்சகம், கோவை.

பக்கங்கள் : 176

பிரதிகள் : 3,000

விலை : ரூ. 20

# பொருளடக்கம்

**ஆ. அப்பொருள் எப்படிப்பட்டவை**

**ஆ-1 நானும் என்போலியவர்களும் எப்படிப்பட்டவர்கள்?**



**ஆ. 2. உள்ளவற்றை அறியவொட்டாமல் என்னைக் கட்டுப்படுத்தி இருக்கின்ற தளைகளின் குணங்கள் யாவை!**



**ஆ. 3. முதல்வனுடைய குணங்கள் யாவை?**

| எண் | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|



## ஈ. அறிந்தபின் உயிர் பெறுவது யாது?

### ஈ. 1. என்னைக் கட்டுப்படுத்தி இருக்கும் கட்டு ஒழியுமல்லவா?



### ஈ. 2. பிறகு உயிர் முதல்வனை அடையுமல்லவா



### ஈ. 3. முதல்வனை அடைந்த உயிர் உடம்பு உள்ள வரையிலும் செய்ய வேண்டுவது யாது?

# அ. இருக்கின்ற பொருள்கள் யாவை?

## அ. 1. முதல்வன் இருக்கின்றானா?

### அ.1.1. திருவிழாவிற்குச் சென்றது

எங்கள் ஊருக்கு மேற்கே பெயர் பெற்ற கோயில் ஒன்று இருக்கிறது. அதற்கு அருகே எப்பொழுதும் வற்றாத ஓர் ஆறு ஓடுகிறது. அந்த ஆற்றின் இருகரையிலும் கண்ணுக்குக் குளிர்ச்சியான தென்னந் தோப்புகள் இருக்கின்றன.

ஆற்றில் இறங்கிக் குளிப்பதற்கு ஒழுங்கான படித்துறைகள் உண்டு. அந்தக் கோயிலில் நடக்கும் திருவிழாக் காலங்களில் நாங்கள் எல்லோரும் போய் அந்த ஆற்றில் குளித்துவிட்டுத் திருநீறு அணிந்து கோயிலுக்குச் சென்று கடவுளை வணங்கிவிட்டு வருவது வழக்கம்.

ஒவ்வொரு ஆண்டிலும் பங்குனி மாதத்தில் பெரிய திருவிழா நடக்கும். அது அமாவாசைக்கு அடுத்துத் தொடங்கிப் பௌர்ணமி அன்று தரிசனத்தோடு முடிவு பெறும்.

ஆயிரக்கணக்கான மக்கள் சுற்றுப் பக்கங்களிலிருந்து வந்து கடவுளைத் தரிசித்துவிட்டுச் செல்வார்கள்.

அந்தக் காலத்தில் திருவிழாக் காலங்களில் பலவிதமான தின்பண்டங்களும்,விளையாட்டுச்சாமான்களும் விற்பது உண்டு.

என்னைப் போன்ற சிறுபிள்ளைகளுக்கு விளையாட்டுச் சாமான்களின்மீது கண்ணோட்டம் மிகுதி. பொதுவாக சிறு நாணல் குழாய்கள் முதலியவைகளை வாங்கி அவைகள் உடைந்து போகும் மட்டும் ஊதிக் கொண்டும் ஆட்டிக் கொண்டும் பொழுது போக்குவோம்.

இந்த ஆண்டு நடந்த பெரிய திருவிழாவிற்கும் நான் என் பெற்றோர்களுடன் சென்றேன். கடைகளில் புதிது புதிதான விளையாட்டுச் சாமான்கள் இருந்தன.

என்மனம் அவைகளை நாடியது. என் பெற்றோர்கள் பணம் கொடுத்தார்கள்.

நான் சில புதுச்சாமான்களை வாங்கிக் கொண்டேன். மரத்தினால் செய்து அழகாக வர்ணம் தீட்டிய ஆகாயக் கப்பல், நாட்டுப்பெரியார் நூல் நூற்கும் படம், முருகக்கடவுள் மயில்மீது ஏறியமர்ந்த படம் ஆகிய மூன்றையும் வாங்கிக் கொண்டு மிக மகிழ்ச்சியுடன் திரும்பினேன்.

கடைக்காரனிடம் அவைகளை வாங்கும்போது இவை-கள் எங்கே யாரால் செய்யப்பட்டன?என்று கேட்டேன்.

ஆகாயக்கப்பல் செய்தவன் புதுச்சேரியிலே ஒரு சிறந்த வேலைக்காரன். சாயம் போகவே போகாது என்றான். நூற்கும் படம் எங்கே செய்தது? என்றேன்.

அது வடநாட்டில் புனாவில் ஒரு சித்திர அச்சாலையில் பதித்தது என்றான்.

முருகக்கடவுள் படமோ என்றேன். புதிதாக சென்னை-யில் ஏற்பட்டிருக்கும் ஒரு அச்சகத்தில் பெயர் போன ஓவியனால் எழுதப்பட்ட பிரதியைப் பார்த்து ஆக்கப் பட்டது என்றான்.

அவைகளைக் கேட்டது முதல் இந்தச் சாமான்கள் எத்துணை அழகாக இருந்த போதிலும் தானே உண்டானவை அல்ல. ஒவ்வொன்றும் ஒவ்வொரு மனிதனால் உண்டாக்கப்பட்டது[1] என்று தெரிந்து கொண்டு அதே நினைவுடன் வீடு திரும்பினேன். ●

---

1. *"உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை இன்மையின் உலகம் செய்வோனை உடைத்து"*

*(சிவஞானபோதம் சூ - 1 - அதி - 2) என்பதன் விளக்கம் இங்கு எழுதப்பட்டுள்ளது.*

## 2. வழியில் கண்ட காட்சி

திருவிழா நடந்த கோயிலுக்கும் எங்கள் ஊருக்கும் மூன்றுகல் தொலைவு. வரும் வழியில் பாதைக்கு இரு புறமும் அழகிய வயல்கள். அவை பச்சைப்பசேல் என்று கண்ணுக்கு இனிய தோற்றத்தைத் தருவன.

நடுநடுவில் தென்னந்தோப்புகளும் கொய்யாமரங்களும் நிரம்ப உண்டு. சாலையில் உள்ள மரங்கள் பாதையைக் குடைபோல் மறைத்துக்கொண்டு கதிரவன் ஒளியும் சூடும் அன்பர்களது உடல்களின்மீது விழாமல் காத்துக் கொண்டிருக்கும்.

ஓர் அழகிய பாலத்தின் வழியாக ஆற்றைத் தாண்டு-வோம். ஆற்றில் குளிர்ந்தநீர் வெண்மணலின் மீது

பாய்ந்து மிகத் தெளிவாக ஓடும். அங்கு ஓர் அணையும் உண்டு. அணையிலிருந்து பிரிந்து செல்லும் வாய்க்கால் வழியாகத் தண்ணீர் சென்று மதகுகளின் வழியே பாய்ந்து பச்சைப்பயிர், பருத்த வாழை, உயரிய தென்னை இவைகளுக்கு நீர் ஊட்டும்.

வடமேற்கே நீலநிறமலைகள் தொடர்ச்சியாக வானை முட்டிக் கொண்டு நிற்கும். அங்கே வெள்ளை மேகங்கள் அம்மலைகளுக்குப் போர்வை போர்த்தது போல் படர்ந்து செல்லும். இக்காட்சிகளை எல்லாம் கண்டு கொண்டே வீடு திரும்பினேன்.

இந்த இயற்கை அழகுகளை எல்லாம் சிந்திந்துக் கொண்டு போகையில் என் கையில் இருந்த சாமான்-களின்மீது என் பார்வை விழுந்தது. உடனே கடைக் காரன் சொன்ன விடை என் நினைவிற்கு வந்தது.

ஆகாயக் கப்பலை ஒரு வேலைக்காரன் செய்தான். நூற்கும் படத்தை ஒருவன் படம் பிடித்தான். முருகக் கடவுள் உருவத்தை ஒருவன் தீட்டினான் என்ற சொற்கள் நினைவிற்கு வந்தன.

இந்த உயிர் இல்லாத சாமான்களைச் செய்ய ஒரு வேலைக்காரன் வேண்டும் அல்லவா? நான் எதிரே காண்கிற இந்த இயற்கை அழகுகள் யாரும் செய்யா-மலேயே ஏற்பட்டனவோ என்று என்னையே கேட்டுக் கொண்டேன்.

இவைபோன்ற சாமான்களை ஒருமுறை செய்து விட்டால் அவைகள் மாறுவதில்லை; வளருவதும் இல்லை. ஆனால் இச்செடி, கொடி, மரம், பயிர் இவைகள் எல்லாம் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே செல்லுகின்றன.

இவைகளை உண்டாக்கி இவைகளுக்கு உணவு கொடுத்து வளர்த்துகிற ஒருவன் இருக்கமாட்டானா? என்று எண்ணினேன்.

நான் சிறிது நேரத்தில் வீடு போய்ச் சேர்ந்தேன்.

இந்த வீட்டை யார் கட்டினது? தச்சர், கொல்லர், கொத்தனார் முதலியோர் கட்டினார்கள்.

அப்படியானால் இந்தப் பெரிய உலகமாகிய வீட்டைக் கட்ட ஒருவன் இருக்கமாட்டானா?

அவன் எங்கே இருக்கிறான்?

அவனை நான் அறிய முடியுமா? என்று எண்ணினேன். எனக்குப் பிடித்தமான சாமான்களை வாங்கிக் கொண்டும் பேசாமடந்தை போல் வாய் திறவாமல் இவற்றையெல்லாம் எண்ணிக் கொண்டே வந்ததைக் கண்டு என் பெற்றோர்களும் வியப்படைந்தார்கள்.

# 3. ஏனையோர் கண்டு களித்தது

நான் திருவிழாவிலிருந்து திரும்பி வந்ததைக் கேட்டதும் என் சாலைப் பிள்ளைகள் உடனே என்னிடம் வந்தார்கள். நான் வாங்கி வந்த சாமான்களைப் பார்த்து மகிழ்ந்தார்கள்.

ஆகாயக் கப்பலை எடுத்து வானில் வீசிக்காட்டினேன். அது வெகு கௌரவத்துடன் சிறிது தூரம் பறந்து போய்ப் பிறகு நிலத்தில் இறங்கியது. அதனைப் பார்த்ததும் பிள்ளைகள் ஆனந்தக் கூத்தாடினார்கள்.

தாங்களும் ஒவ்வொருவராக அதனை எடுத்து ஆகாயத்தில் வீசினார்கள். அது பறந்து சென்று நிலத்தில் படிந்தது.

பார்த்தீர்களா! இதனைப் புதுச்சேரியிலே ஒரு சாமார்த்தியமான வேலைக்காரன் செய்தான் என்று கடைக்-காரன் சொன்னான் என்றேன். இந்தச் சிறு சாமானே இத்தனை அதிசயமாகப் பறக்கிறதே, நேற்றுப் பகலில் நமது ஊரின் பேரில் பறந்த அந்தப் பெரிய ஆகாய விமானத்தை எப்பேர்ப்பட்டவன் செய்திருக்க வேண்டும் என்று ஒரு சாலைப்பிள்ளை கேட்டான்.

அதுதானோ! மேற்கே மலை, அதன் மேலே வானம், கீழே நிலம், அடுத்தபடி தோப்பு, அருகே ஆறு இவை-களை யார் செய்தார்கள்? என்று நான் கேட்டேன்.

அவை எல்லாம் இயற்கை என்று வாசித்திருக்கிறேன் என்றான் என் நண்பன்.

சரி நேரில் கண்டதையே இவ்வாறு சொல்கிறோமே, நேரில் காணாத இவைகளை நம்புகிறாயா என்று சொல்லி நூற்கும் பெரியார் படத்தைக் காட்டினேன். இது நிழற்படம் (போட்டோ) ஆகையால் இதனை ஒருவர் எடுத்திருக்க வேண்டும் என்று உணரலாம் என்றான் நண்பன்.

'ஏன்' என்று கேட்டேன். புகைப்படம் பிடிப்பதை நாம் பார்த்திருக்கிறோம். ஆகவே, முன் கண்டதைக் கொண்டு இது இன்ன வகையில் ஏற்பட்டது என்று சொல்ல முடியாதா என்றான்.[1] ஆகாயக் கப்பல் செய்-தது ஒருவன் என்றால், உலகப் பொருள்களாகிய மலை, ஆறு, நிலம், இவைகளை இயற்ற ஒருவன் வேண்டாமா? என்றேன்.

---

1. இதனை அனுமான அளவை என்பர்.

அது அவ்வளவு உறுதியாகக் கூறமுடியாது என்றான்.

சரி இந்த முருகக்கடவுள் படத்தைப் பார். இதனை இயற்றியது ஒருவன் என்று தோன்றவில்லையா? ஆமாம், இப்படத்தின் பேரிலேயே அச்சுக்கூடப் பெயரும் எழுதியவர் பெயரும் இருக்கின்றனவே என்றான். அதை நம்புகிறாயா' என்றேன்.

எழுதியிருப்பதினால் நம்பத்தான் வேண்டும் என்றான்[2] ஆகவே நேரில் பார்க்காவிட்டாலும், அறிவினால் அறியாவிட்டாலும், பிறர் ஒருவர் பார்த்து எழுதி வைத்ததைக் கொண்டு உலகை ஆக்கினவன் ஒருவன் உண்டு என்று ஏன் கொள்ளக் கூடாது என்றேன்.

என் சொற்களை அவன் நம்பியதாகத் தெரியவில்லை. 'பின் யோசிப்போம்' என்று சொல்லி எல்லோரும் அவரவர் வீடுகளுக்குத் திரும்பினார்கள்.

---

2. இதனை ஆகம அளவை என்பர்.

# அ. 1 4. மாறுதல்கள்

மறுநாள், எனது நண்பர்கள் என்னுடன் விளையாட வந்தார்கள். அவர்களிலே ஒருவன் 'எங்கள் கொல்லை-யில் அவரைச்செடி வைத்திருந்தோம். அது நன்றாக முளைத்தது; வளர்ந்தது; நேற்று செத்து விட்டது' என்றான்.

நீர் ஊற்றவில்லையா? என்று கேட்டேன். நன்றாய்த் தான் பார்த்து வந்தோம்; வேண்டிய மட்டும் நீர் ஊற்றினோம்; நேற்றுப் பனி பெய்ததால் வாடிப் போயிற்று என்றார் என் தகப்பனார் என்றான்.

'நம்மால் ஆகவில்லை'; ஆமாம் அது தோன்றியது; இருந்தது; அழிந்தது இந்த மூன்றும் யார் செய்தது? என்றேன்.

ஏன் ஒருவர் செய்ய வேண்டும்? தானே ஆகாதா என்றான்

அதற்குள் மற்றொருவன், எங்கள் பூனை நான்கு குட்டி-களைப் போட்டது. இரண்டுநாள் எல்லாம் இருந்தன. நேற்று இரண்டு காணவில்லை. விசாரிக்கையில் தாய்ப் பூனை இரண்டைத் தின்றுவிட்டதாம்! என்ன ஆச்சரியம் என்றான்.

சரிதான் பூனைக்குட்டி பிறந்தது. இருந்தது; செத்தது இதுதானே நடந்தது.

இதை எல்லாம் செய்தது யார்?

சரிதான் நேற்று இறந்து போன அடுத்த வீட்டுப் பாட்டியின் கதையும் இதுதானா? என்றான் அடுத்த பையன்.

அதற்கென்ன சந்தேகம். உலகத்தில் உள்ள உயிர்ப் பொருள்கள், உயிரில்லாப் பொருள்கள் எல்லாம் இந்த மூன்று நிலையினையும் அடைகின்றன. தோன்றும் இருக்கும், அழியும். இந்த மாறுதல்களை யார் செய்வது? என்று கேட்டேன்.[1]

பிள்ளைகளுக்கு மேல் யோசனை ஓடவில்லை. வேறு பேச்சுத் தொடங்கிக் கொண்டார்கள்.

---

''அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டி உணரப்படும் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலுடைமையால் ஒரு-வனால் தோற்றப்பட்டதாய உள்பொருளேயாம்'' என்னும் சிவஞானபோத முதற்சூத்திர உரை இங்கு விளக்கப்பட்டுள்ளது.

## அ.1.5. இயற்கையும் செயற்கையும்

எப்போதும் போலவே என்னுடன் விளையாட எனது நண்பர்கள் வந்தார்கள். சிறிது நேரம் விளையாடின பிறகு சிறிது இளைப்பாற உட்கார்ந்தோம்.

ஒரு நண்பன் நீ நேற்று கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுகிறேன் என்றான். 'என்ன' என்றேன். அவரைச் செடி, பூனைக்குட்டி, பாட்டியம்மாள் இவர்கள் தோன்றி இருந்து அழிந்ததெல்லாம் இயற்கையே என்றான்.

எப்படிக் கண்டு பிடித்தாய் என்றேன்.

உலகத்தில் தாவரங்களும், விலங்குகளும், மனிதர்களும் தோன்றி, வளர்ந்து, வாழ்ந்து, மடிவது இயற்கையே.

இது பஞ்சபூதங்களின் சேர்க்கையால் நிகழ்கிறது. இது பௌதிக மாற்றம் எனப்படும். இதனை இயற்கை என்று சொல்லலாம். அல்லது பஞ்சபூதங்களே இவற்றைச் செய்கின்றன. இவற்றைச் செய்வதற்கென வேறொருவன் வேண்டியதில்லை என்று சொல்லலாம். பாடசாலையிலும் இதுபோல் நிகழும் மாற்றங்களை இயற்கை மாற்றங்கள் என்று சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள் என்றான்.

இயற்கை என்றால் என்ன? என்று நான் கேட்டேன்.

இயல்பாக இருப்பது - இருந்த படியே இருப்பது - இயற்கை என்று சொன்னான்.

அப்படியானால் ஒரு பொருள் எப்படித் தோன்றிற்றோ அப்படியே இருக்க வேண்டும். அப்பொழுதுதான் இயற்கை என்று சொல்லலாம். மாற்றம் அடைகின்ற பொழுது அதனைச் செயற்கை என்றுதானே சொல்ல வேண்டும் என்றேன்.

மாறுதலடைவதே அதனுடைய இயற்கை என்று சொல்லக் கூடாதா? என்றான்.

மாறுதல் அடைவதை இயற்கை என்னும் சொல்லால் சொல்லக் கூடாது என்றேன். மேலும் மாறுதலாகிய செயல் நிகழ்வதனால் அதனைச் செய்பவன் ஒருவன் வேண்டும் என்றும் சொன்னேன்.

இந்த மாறுதல்களைச் செய்வது பஞ்சபூதங்களே என்பது பற்றி நீ என்ன சொல்லுகிறாய் என்று கேட்டான். பஞ்சபூதங்களும் அறிவில்லாத பொருள்களே. அறிவில்லாத பொருள்கள் தாமே இயங்கவும் ஒரு காரியத்தைச் செய்யவும் மாட்டா? ஆகையினால் இவற்றைச் செய்வதற்கு

அறிவும் சுதந்திரமும் உடைய ஒருவன் இருக்க வேண்டும் என்றேன்.[1] அவ்வளவில் அன்றைய பேச்சு முடிந்தது. அவரவர்கள் வீட்டிற்குச் சென்றுவிட்டார்கள்.

1. சிவஞான சித்தியாரில் " இயல்புகாண் தோற்றி மாய்கை " (செய் 21) என்னும் உலகாயதரின் கொள்கையை மறுத்து "செயல் செய்வான் ஒருவன் வேண்டும்; செயற்படும் அசேதனத்தால்" என நிறுவப்பட்ட செய்தி இங்கு விளக்கப்பட்டுள்ளது.

# 6. ஆலமரத்துக்கதை

இரண்டு மூண்று நாட்களுக்குப் பிறகு ஒரு மரத்தடியில் மாலை நேரத்தில் விளையாடினோம்-எனது நண்பன் ஒருவன் அதோ பார்த்தீர்களா அந்த ஆலமரம் என அருகிலிருந்த ஒரு பெரிய ஆலமரத்தைச் சுட்டிக் காட்டினான்.

ஆமாம்; அது ஒரு பெரிய ஆலமரம்தான்: அதன் அடியில் போய் விளையாடலாமா என்றான் மற்றொரு நண்பன்.

இல்லை; விளையாடச் சொல்லவில்லை; அது காய்த்துப் பழுத்திருக்கிறது பார்த்தீர்களா என்றான்.

ஆம், நன்றாகப் பழுத்திருக்கிறது. குருவிகளுக்குக் கொண்டாட்டம்தான் என்றேன். அதற்காகச் சொல்லவில்லை. அதன்கீழ் ஓர் அநுபவம் பெற்றேன். அதனைச் சொல்லவே வந்தேன் என்றான்.

''என்ன அப்படிப்பட்ட அனுபவம்? ஆலமரத்துப் பேய், ஏதாவது கதை சொல்லிற்றோ?'' என்றேன்.

ஆம்; அதுதான்; கூறுகிறேன். கேளுங்கள்: உலகப் பொருள்களில் நிகழும் மாற்றங்களைச் செய்வதற்கு அறிவுடைய ஒருவன் இருக்க வேண்டும் என்று நேற்று சொன்னாய் அல்லவா அதையே மனத்தில் வைத்துக் கொண்டு மறுநாள் இங்கே வந்து ஆலமரத்தடியில் சாய்ந்துகொண்டு யோசித்தேன்.

உலகைப் படைப்பதற்கு ஒருவன் வேண்டுமா? மாறுதல் ஆவதற்கும் ஒருவன் வேண்டுமா? என்று வெகுநேரம் எண்ணினேன்.

அப்போது அண்ணாந்து பார்க்க ஆலமரக்கிளைகளில் ஆயிரக்கணக்கான சிறுபழங்கள் பழுத்திருந்தன. இதென்ன விந்தை! இத்தனை பெரிய மரத்திற்கு இத்தனை சிறிய பழம்! இம்மரத்தை ஒரு கடவுள் உண்டாக்கியிருந்தால் அக்கடவுளின் அறியாமையை என்ன என்று கூறுவது! மரஞ்செடிகளில் தாரதம்மியம் வேண்டாமா!

எங்கள் வீட்டுப் பிறவடையில் (பின்புறத்தில்) ஒரு பரங்கிக் கொடி காய்த்திருக்கிறது. சிறு செடிக்குப் பெரியகாய், ஆனால் இப்பெரிய மரத்திற்குச் சிறிய பழம் ஏன்! இம்மரத்தில் பரங்கிக்காய் போல் பெரியகாய் பழுக்கக் கூடாதா என்று வெறுப்புடன் யோசித்தேன்.

இப்படி யோசிக்க யோசிக்க ஜில்லென்று காற்று வீசிற்று. மரத்திலிருந்து ஒரு சிறிய பழம் என் அடிவயிற்றின்மீது விழுந்தது. உடனே சுரீர் என்று வலி ஏற்பட்டது. அடடா, இச்சிறு பழம் விழவே இத்தனை வலி ஏற்பட்டதே. பரங்கிக்காய் போன்ற ஒரு பழம் இதிலிருந்து விழுந்தால் என் உடல் நசுங்கிப் போயிருக்குமே!

இவைகளை உண்டாக்கினவன் முன்னெச்சரிக்கையுடன் தான் செய்திருக்க வேண்டும் என்று எண்ணி வீடு திரும்பினேன். நேற்றிலிருந்து என் கொள்கை மாறிவிட்டது என்றான்.

---

*பிறவடை-கொங்குநாட்டுப் பேச்சு வழக்கு.*

# அ. 1.7. முதல்வன் உண்டு

எனது நண்பன் சொன்ன சம்பவத்தைக் கேட்டவுடன் நாங்கள் எல்லோரும் அம்மரத்திற்குச் சென்று பார்த்-தோம். எனது நண்பனுக்குத் தோன்றிய ஞானம் எங்களுக்கும் உதித்தது போல் மகிழ்ந்தோம். இதுவும் ஒரு போதிமரம்தான் என்றோம்.

ஒரு பொருளை ஆராய்வதற்கு மூன்று பிரமாணங்கள் உண்டு என்று எங்கள் ஆசிரியர் சொன்னது நினைவிற்கு வந்தது.

அவை : நேரே கண்டு அறிவது. நேரிற்கண்டதைக் கொண்டு காரணத்தை அறிவது.' கண்டதுமல்லாமல், கண்டதைக் கொண்டு காரணத்தை, அறிவதுமல்லாமல்

கண்டார்கள் சொல்லக் கேட்டறிவது என்பன இவற்றையே காட்சி, அனுமானம், நூல் என்று சொல்வார்கள்.

ஆகாய விமானம் காட்சியாற் கண்டது. நூற்கும் படம் அனுமானத்தால் அறிந்தது. முருகக் கடவுள் படம் நூலறிவு சொல்லிற்று.

இம்மூன்றையும் செய்தவன் இருப்பதுபோல் மலை, ஆறு. பயிர் இவைகளை ஆக்கியவன் ஒருவன் வேண்டும், அவரைச் செடி பற்றியும், பூனைக்குட்டி பற்றியும், பாட்டியம்மாள் பற்றியும் கூறப்பட்ட நிகழ்ச்சிகள் தோன்றுதல், இருத்தல், அழிதல், என்ற மூன்று நிலை-களைக் காட்டின.

இம்மாறுதல்களைச் செய்து செலுத்துகின்ற அதிகாரி ஒருவன் இருக்க வேண்டும். அவ்வதிகாரியே உலகை அறிவுடன் படைத்ததினால் ஆலமரத்திற்குச் சிறுபழமும் பரங்கிச் செடிக்குப் பெரிய காயும் தாரதம்மியமும் பயனும் அறிந்தே வைத்துள்ளான். அவனே முதல்வன். அவனன்றி ஓரணுவும் அசையாது என்று நாங்கள் எல்லோரும் துணிந்து ஒரு முடிவு செய்தோம்.[1]

1. *இதுவரை பதிப்பொருள் ஒன்று உண்டு; அது பேரறிவுடையது; அதுவே உலகைப் படைத்துக் காத்து அழிக்கிறது என்னும் செய்தி விளக்கப்-பட்டது.*

## அ.2.1. முதல்வனை நான் ஏன் அறியவில்லை ?

முதல்வன் உண்டு என்று தெரிந்து கொண்ட பிறகு அம்முதல்வனை நான் ஏன் அறிந்து கொள்ளவில்லை? என்ற கேள்வி தோன்றுகிறது. அதைப்பற்றி எங்கள் கூட்டத்தில் ஒருநாள் தர்க்கித்தோம்.

''உன்னை நீ அறிவாயா?'' என்று எனது நண்பனைக் கேட்டேன்.

ஏன்? என்னை நான் நன்றாக அறிவேன். இதோ என் உடம்பு. அதில் கை, கால், தலை, மார்பு, வயிறு எல்லாம் இருக்கின்றனவே என்றான்.

சரி, உன் உடல் முழுவதையும் அறிந்தனையா? என்றேன்.

ஆம், அதற்கென்ன ஐயம்? என்றான்.

'உன் முகத்தை நீ பார்த்தாயா?' என்றேன்.

இல்லையே! கண்ணாடியால் தான் பார்த்தேன்.

சரி, முதுகைப் பார்த்தாயா?

இல்லை. முன்னும் பின்னும் இரண்டு கண்ணாடிகளைக் கொண்டு பார்த்தேன் என்றான்.

உன் உடலுக்குள் இருக்கும் உறுப்புகள், எலும்பு, குடல், இதயம் முதலியவைகளைப் பார்க்கிறாயா?

இல்லை. உண்டு என்று மாத்திரம் அறிவேன். ஆனால் எக்ஸ் கதிர் ( X-Ray ) மூலமாகப் பார்க்க முடியும் என்றான்.

ஒருவன் தன் சொந்த உடலில் சில பாகங்களை அறிவதற்கே இயலாது. ஒரு கண்ணாடி, இரண்டு கண்ணாடிகள், 'X கதிர்' இயந்திரம் இவைகளைக் கொண்டே அறிய முடியும்.

உன் கண்ணுக்கு நேராக அவைகளை அறிய ஆற்றல் இல்லை.

இன்னும்பார்! நுட்பமான ஒளிகளை அது காண இயலாது. மிகவும் உருக்கமான ஒளியையும் காணமுடியாது. கண்ணின் ஆற்றல் மிகக்குறைவானது. ஓர் எல்லைக்கு உட்பட்டது. உன் உடம்பையே காண இயலாதபோது உலகத்தில் உள்ள ஏனைய பொருள்களைக் காண முடியுமா?

கட்புலனில் குறைவு என்ற தன்மை அதற்குத் தடை-யாக இருக்கிறது. இதே மாதிரி நாக்கு, மூக்கு, காது, தோல் முதலியவைகளும் குறைவு உடையனவே. இவ்-விதம் குறைந்த ஆற்றல்களுடைய நமது புலன்களாகிய கண், வாய், மூக்கு, செவி, மெய் முதலியவைகளால் முதல்வனை அறிதல் முடியாது.

அதனால்தான் முதல்வன் நமக்குத் தெரியவில்லை. நாம் பல தடைகளால் கட்டுப்பட்டுள்ளதால் முதல்-வனை அறியமுடியவில்லை. அத்தடைகள் என்ற கட்டு நீங்கினால் நாம் அவனைக் காணமுடியும் என்றேன்.[1]

---

1. *''பொறி புலன் கரணமெல்லாம் ........ஆன்மாவை அறிதரா'' (சிவ.சித்.செய்.231)*

*''ஊனக்கண் பாசம் உணராப் பதியை''*

*(சிவஞான. சூ-9)*

*ஆகிய இவற்றின் கருத்துக்கள் இங்கு விளக்கப்பட்டன. இதனால் ஆன்ம அறிவைத் தடைசெய்து நிற்கும் மறைப்பு என்று ஒரு பொருள் உண்டு என்பது முடிவு செய்யப்-பட்டது. அம்மறைப்பே ஆணவ மலம் எனப்படுவது. ஆன்மா சிற்றறிவுடையது ஆதலின் ஆணவம் ஆன்-மாவைப் பற்றிக் கொண்டு அதன் அறிவை மறைக்கும்.*

*இது ஆன்மாவை எப்பொழுது பற்றிற்று என்று சொல்ல முடியாது என்று ஆன்மா உள்ளதோ அன்றே ஆணவமும் அதனைப் பற்றியுள்ளது எனவே ஆணவ மலமும் அலாதி-யான பொருள் என்று சைவசித்தாந்தம் கூறும்*

இதனை மற்றவர்களும் ஒத்துக் கொண்டு சென்றார்கள்.

---

ஆணவ மலத்தின் இயல்பை

"ஒன்றதாய் அநேக சத்தி உடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மாவின்தன் அறிவொடு தொழிலை
ஆர்த்து
நின்று போத்திருத்துவத்தை நிகழ்த்திச் செம்பினில்
களிம்பு ஏய்ந்து
என்றும் அஞ்ஞானம் காட்டும் ஆணவம் இயைந்து
நின்றே"

(சிவஞான சித்தியார் சுபசெய் - 170) என்பதனால் அறியலாம்.

# அ.2.2. முதல்வனை அறியும் அறிவு பெறல்

மறுநாள் நாங்கள் வழக்கம் போல் கூடிப் பேசினோம். எங்கள் பேச்சு நேற்று முடிவு செய்த இடத்திலிருந்தே தொடங்கிற்று. எங்களுள் ஒருவன் நமக்குள்ள குறை-வான அறிவினால் இறைவனைக் காண முடியவில்லை என முடிவு செய்தோமே; அந்தக் குறைந்த அறிவு வளர்ந்து நிறைந்த அறிவாக ஆவது எவ்வாறு? என்று கேட்டான்.

அவனுக்கு நான் பின்வருமாறு விடை கூறினேன்.

குழந்தை அறிவு குறைந்தது. அனுபவம் இல்லாதது. அது அக்கம் பக்கத்து உலகப் பொருள்களையும் உயிர் வகைகளையும் கண்டு அறிவைப் பெருக்கிக்

கொள்ளுகிறது. அனுபவமும் அடைகிறது. ஐந்து வயதானதும் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்படுகிறது.

முதலில் அகரம் முதலிய எழுத்துக்களைத்தான் படிக்க முடியும். சிறு சிறு சொற்களைத்தான் எழுத்துக்கூட்டி வாசிக்க முடியும். பிறகு முதல் வகுப்புத் தேர்ந்தவுடன் சிறு பாடங்கள் படித்துச் சிறுகணக்குகளும் போட முடியும்.

பிறகு வயதும் அனுபவமும் ஏறஏற இரண்டாவது, மூன்றாவது, நான்காவது வகுப்புப் பாடங்கள் படிக்க முடியும். கணக்கு முதலிய கலைகளையும் அறியக்கூடும். இவ்வாறு குழந்தை பெரியவனாகிப் பத்தாவது வகுப்புப் படித்துக் கலாசாலைகளுக்குச் சென்று பண்டிதனாக முடியும்.

அது குழந்தையாக இருந்தபோது அதன் அறிவு எவ்வாறு இருந்தது. பண்டிதனான போது எவ்வாறு விளங்கிற்று. குழந்தையாக இருந்தபோது திருமுறைகள் அதற்கு வெறும் காகிதங்களாகத் தோன்றும். பண்டிதனான போது அவைகளில் நிரம்பிய ஞானம் தோன்றும்.

அதுபோல நாம் அறிவு குறைந்தவர்களாக இருக்கும் போது முதல்வனுடைய தன்மையை அறிய மாட்டோம். அறிவு தேர்ந்தவர்கள் ஆனகாலத்தில் முதல்வனுடைய உண்மைக் குணங்களை அறிவோம். குழந்தைகளாக இருக்கும் போது முதல்வனை அறியவொட்டாமல் நம்மைத் தடுத்து நிற்பது அறியாமையே ஆகும்.

முதல்வன் முழு அறிவு படைத்தவன். நாமோ குறைந்த அறிவு உள்ளவர்கள். குறைந்த அறிவு உடைய நாம்

நிறைந்த அறிவு படைத்தவர்கள் ஆகவேண்டுமானால் குழந்தை பாடசாலையில் சேர்ந்து முதல் வகுப்பு முதல் பண்டித வகுப்பு வரையில் வாசிப்பதைப் போல உலக அறிவு அனுபவத்தில் தேற வேண்டும்.

ஒரு தந்தைக்குப் பல குழந்தைகள் இருந்தால் அக்குழந்தைகள் எல்லாரும் நல்ல அறிவும் அனுபவமும் பெறவேண்டும் என்பது அந்தத் தந்தையின் விருப்பம். அதற்காகவே குழந்தைகளைப் பாடசாலைக்கு அனுப்பித் தக்க ஆசிரியர்களிடம் படிப்புக் கற்றுக் கொள்ளச் செய்து தேர்ச்சி பெறச் செய்வான்.

அதுபோலவே முதல்வனும் உயிர்களாகிய நம்மை உலக வாழ்க்கைக்கு அனுப்பிப் படிப்படியாக நம்மை அறிவிலும் அனுபவத்திலும் தேறச் செய்வான். நாமும் அறிவு பெற முயலுவோம்.

சிலபேர் நன்றாகப் படித்து முன்னேறுவார்கள். சிலபேர் வாசியாமல் பின் தங்குவார்கள். அதுபோலவே தான் நம்மிலும் சிலபேர் முன்னேறுகிறோம். சிலபேர் பின் தங்கி இருக்கிறோம். இவ்விதம் அனுபவம் அடையும் பொருட்டு நம்மை முதல்வன் உலகத்திற்கு அனுப்புவதற்குக் காரணம் அவன் நம்பேரில் வைத்திருக்கும் அளவற்ற கருணையேதான்.[1]

---

1 - "ஞானத்தின்
*கண்ணை மறைத்த கடிய தொழில் ஆணவத்தால்*
*எண்ணும் செயல் மாண்ட எவ்வுயிர்க்கும்-உள்நாடிக்*
*கட்புலனால் காணார்தம் கைக்கொடுத்த கோலே*
*போல்*

அவ்வாறு தனது அளவற்ற கருணையினால் முதல்வன் உயிர்களாகிய நம்மை உலகத்திற்கு அனுப்புகையில் படிப்படியாகப் பல வருக்கங்களிலும் பிறக்கச் செய்வான் புல், மரம், ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர் இவைகளின் மேல் ஆறறிவு உயிராகிய மனிதன். உயிர்களாகிய நாம் புல் முதலிய பிறவிகள் எடுத்து இறுதியில் மனிதன் ஆகிறோம்.

இப்பிறப்புகளில் பிறந்து வளர்ந்து இறப்போம். மனிதனாகியும் பிறந்து வளர்ந்து இறப்போம். ஒவ்வொரு பிறவியிலும் அனுபவம் பெற்று, அறிவும் பெற்று முன்னேற்றம் அடைவோம்.

படிப்பில் ஊக்கம் இல்லாத பிள்ளைகளைப் போல் ஒரே பிறவியில் பலகாலம் தங்கி விடுவதும் உண்டு. இவ்வித-மாகப் படித்துத் தேர்ந்து அறிவு முதிர்ச்சி பெற்று நாம் ஒவ்வொருவரும் முதல்வன் தன்மை போல் நிறைந்த அறிவு பெற வேண்டும் என்பது அவனுடைய கருத்து.

இவ்வித அறிவுப் படிப்புப் பெறுவதற்காக ஈசன் நமக்கு உடல், கருவிகள், உலகம், பொருள்கள் முதலியவை-களை அருளுகிறான். இவைகளே நமது பிறப்பிறப்பு-களுக்குக் காரணம். முதல்வனை அறிவதற்காகவே இவைகளை நாம் பெறுகிறோம் என்று விளக்கமாகக் கூறி னேன். மற்றவர்களும் இதனை ஒப்புக்கொண்டார்கள். ●

---

*பொற்புடைய மாயைப் புணர்ப்பின் கண்-முற்பால்*
*தனுகரண புவனமும் தந்து அவற்றால்*
*மனமுதலால் வந்த விகாரத்தால்-வினை இரண்டும்*
*காட்டி அதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டும்*
*மீட்டறிவு காட்டும் வினை போற்றி''*

*என்னும் போற்றிப் ப:றொடைக் கருத்து (கண்ணிகள் 9-13) இங்கு விளக்கப்பட்டது எனலாம்.*

## அ. 2.3. உடம்பு எத்தகையது? உலகம் எத்தகையது?

உயிர்களாகிய நாம் உய்யும் பொருட்டு முதல்வன் தன் அளவற்ற கருணையினால் நமக்கு உடல் முதலிய-வற்றைத் தந்தான் என்று முடிவு செய்த நாங்கள் மீண்டும் அவ்வுடல்களின் தன்மை யாது? உடலைச் சுற்றியுள்ள ஏனைய உலகப் பொருள்கள் எப்படிப் பட்டவை? என்று மறுநாள் பேசத் தொடங்கினோம். முதல்வனும் அறிவுடையவன். (நாமும்) உயிர்களும் அறிவு உடையவைகள். நமக்குப் பகுத்தறிவு உண்டு. ஆனால் உடல்களுக்கு அறிவு உண்டா? இல்லை.

உயிர் உடலில் இருக்கும் வரையில் இவ்வுடல் ஆடிக்-கொண்டிருக்கும். உயிர் போன பிறகு இதற்கு நட-மாட்டம் இல்லை. பூனைக்குட்டி இறந்த பிறகு பால்

குடிக்காது; கத்தாது. அடுத்த வீட்டுப் பாட்டியம்மை இறந்த பிறகு யாரையும் திட்டமாட்டாள். அவளுடைய உடல் பயனில்லாமல் போனதனால் சுடு-காட்டிற்குக் கொண்டு போய் எரித்து விட்டார்கள். உடலோ சாம்பலாகிப் போய்விட்டது.

சுற்றிலும் காணப்படுகின்ற மலைகள், ஆறுகள், வயல்-கள், மேகங்கள் உயிரற்றவை. தமக்குத் தாமே அறியும் ஆற்றல் அவைகளுக்கு இல்லை. ஆனால் பூகம்பம் வந்தால் அவை அழியும். வெள்ளம் வந்தால் கரைந்து கெட்டுவிடும். காற்று வீசினால் சிதறி ஓடும்.

ஆகவே இந்த உலகப் பொருள்கள் மாறுதல் அடையும். அம்மாறுதல்கள் யாரால் ஏற்பட்டன? அம்மாறுதல்களி-னால் அழிவு ஏற்படுமோ ? இல்லை என்று கூறும் விஞ்ஞானக் கலைகள். பாட்டியின் உடல் கரியமில வாயுவாகவும், சாம்பலாகவும் மாறியது. விறகு எரிய வாயுவும் புகையும் சாம்பலும் ஆயின. பொருள் ஒழிய-வில்லை. மாறுதல்தான் அடைந்தது.

ஆகவே உலகப் பொருள்கள் என்றும் உள்ள பொருள்கள்தாம். ஆனால் மாறுதல் அடையும். இம்மாறுதலே தோற்றமாகவும் இருப்பாகவும், அழிவாகவும் மூன்று நிலைகளாக நமக்குத் தோன்றுகின்றது.

ஆகவே அறிவற்ற இவ்வுலகப் பொருள்கள் எல்லாம் உள்ள பொருள்களே.[1] அவைகள் மாயை என்னும்மூலப்

1. *உலகம் உள்ளது சிவஞானபோதம் - சூ-1 - 'திதியே' அதி-2 இனி உலகம் உள்ளது என்றது - என்னும்-கருத்து இங்கு விளக்கப்பட்டது. மேலும் - சைவ சித்தாந்தத்தில் 'அசத்து' என்பது இல்லாதது-சூனியம்*

பொருளிலிருந்து தோன்றி அதிலேயே ஒடுங்குகின்றன.[2] அத்தோற்றம் ஒடுக்கம் எல்லாம் முதல்வனுடைய ஆணையினால் ஏற்படுகின்றன[3]

---

*என்னும் பொருளில் ஆளப்படுவதில்லை; நிலையில்லாதது என்னும் பொருளிலேயே ஆளப்படுகிறது. ஆதலின் நிலையில்லாத இவ்வுலகமும் சத்துப்பொருளே என்னும் நுட்பமும் இங்கு விளக்கப்பட்டுள்ளது. (விவரம் : "உண்டு போலின்றாம் பண்பின் உலகினை அசத்தும் என்பர்" என்னும் சித்-சூ-6 வி 3 சிவஞான சித்தியாரும் "அசத்தும் என்னும் உம்மை பொருள் தன்மையால் சத்தென்பது படநின்ற எதிர்மறை" என்னும் சிவஞான முனிவர் உரையும் மற்றும் "சத்காரிய வாதம் கூறும் சைவசித்தாந்தத்தில் அசத்து என்பது சத்துக்கு மறுதலையன்மையான்" என்னும் சிவஞான போத சிற்றுரையும் காண்க).*

2. *"எல்லாம் விரிந்த வகைபுரிந்து அடைவின் மேவி*
   *அவை ஒடுங்க வருகாலம் உயிர்களெல்லாம்*
   *மருவிடமாய்*
   *மலமாய் மன்னியிடும் அரனருளால் மாயைதானே"*

*என்னும் சிவப்பிரகாசம் செய் - 22 காண்க*

3. *"போக்குவரவு புரிய ஆணையின்" என்னும் சிவஞானபோதம் சூ-2 காண்க.*

*இதனால் மாயை என்னும் பொருள் ஒன்று உண்டு என்பது முடிவு செய்யப்பட்டது. இதுவும் மலங்களுள் ஒன்று*

என்று நாங்கள் பேசி முடிவு செய்தோம். 

---

ஆணவத்தால் மறைக்கப்பட்டிருக்கும் ஆன்ம அறிவை இம்மாயை சிறிதே விளக்கம் செய்யும்.

மாயையின் இயல்பினை

''நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகத்திற்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும் வியாபியாய் விமலனுக்
கோர்
சத்தியாய்ப் புவனபோகம் தனுகரணமும் உயிர்க்காய்
வைத்தோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யுமன்றே''

(சித்தியார் - சுப - செய் - 143) என்னும் செய்யுளால் அறிக.

# 4. பிறப்பு இறப்புக்கள் ஏன் நிகழ்கின்றன ?

மறுநாளும் நாங்கள் கூடி யோசித்தோம். ஒருமுறை பிறந்தால்போதாதோ? அடிக்கடி பிறந்து பிறகு இறந்து மறுபடியும் பிறக்க வேண்டுமா? கிறித்தவர்களும் முகமதியர்களும் இதனை நம்புவதில்லையே! என்று ஆலோசித்தோம்.

அடுத்த தெருவில் ஒரு குழந்தை குருடாகப் பிறந்தது. முடவாண்டிகள் விடுதியில் பல முடவர்கள் பிறவியிலிருந்தே ஊனமாகக் கிடக்கிறார்கள். செவிட்டூமைப் பள்ளிகளில் இருபது பிள்ளைகள் பரிதாபகரமான நிலையில் இருக்கிறார்கள். மேலும் ஒருவன் செல்வன் வீட்டில் பிறக்கிறான். அதே வினாடியில் மற்றவன் பிச்சைக்காரனாகப் பிறக்கிறான்.

இவைகளுக்கு என்ன காரணம்? முதல்வன் கருணை உள்ளவன் என்றால், தன்மக்கள் எல்லோருக்கும் ஒரே விதமான பாக்கியத்தைக் கொடுக்கலாகாதா? என்றும் யோசித்தோம்.

உயிர்கள் அறிவு பெற்றவைகள். அவை குறை அறிவு உடையனவாக இருந்தபோதிலும் பகுத்தறிவு உடை-யவையே. முன்னேறவோ, பின்னடையவோ, நிர்ண-யிக்கக் கூடும். முற்பிறவியிலே ஒழுங்காக நடந்து கொள்ளாததால்தான் சில உயிர்கள் ஊனங்களாகப் பிறக்கின்றன.

இத்தண்டனையைப் பெற்றாவது இனி நல்ல வழியில் ஏன் இவை இருக்கக் கூடாது என்பது முதல்வன் கருத்தாகும் என்று எங்கள் பேச்சு நிகழ்ந்தது. இந்த ஆராய்ச்சியினால், முன்னே ஒரு பிறப்பு உண்டு. அந்தப் பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளினால் இப்போது இந்த நிலைமைகளை உயிர்கள் பெறுகின்றன. முன் பிறப்பிலே செய்த வினையின் பயனாலே இப்-போது ஒரு பிறவி எடுக்கிறோம். இப்போது செய்யும் வினையினாலே இனி அடுத்த பிறவி எடுப்போம். இவ்-விதம் உயிர்களாகிய நாம் நாள்தோறும் செய்கிற வினைகளுக்கு முந்திய சரிதமும் உண்டு. இப்போதைய சரிதமும் உண்டு. இனி நடக்கப்போகும் கதையும் உண்டு.

இவைகளை நடத்தி வைப்பவன். முதல்வன். சட்டம் பிசகாமலும் நடத்தி வைப்பான், என முடிவு செய்தோம்.[1]

---

1. "இருவினை இன்பத் துன்பத்து இவ்வுயிர்
பிறந்திறந்து வருவது போவதாகும்".

(சிவ.சித்-செய்-94)

"பேறிழவு இன்பமோடு பிணிமுப்புச் சாக்காடு என்னும்
ஆறும்முன் கருவுள்பட்டது அவ்விதி அனுபவத்தால்
ஏறிடும் முன்பு செய்த கன்மம் இங்கு இவற்றுக்கு ஏது
தேறுநீ இனிச்செய் கன்மம் மேலுடற்சேருமென்றே"

(சிவ-சித்-செய்-99)

என்னும் செய்யுள்களின் கருத்துக்கள் இங்கு விளக்கப் பட்டன.

கன்மமலம் என்பது ஒன்று உண்டு என்பதும் அதுவே பிறப்புக்குக் காரணம் என்பதும் இங்கு விளக்கப்பட்டன.

இக்கன்ம மலத்தின் இயல்பினை

தன்மமோடு அதன்மமாகித் தான் இரு பயனும் தந்து
நன்மை தீமையினும் இன்பத் துன்பினும் நாடிக்காண
முன்னமே ஆன்மாவின்தன் மும்மலத்து ஒன்றதாகிக்
கன்மமும் மூலம் காட்டிக் காமிய மலமாய் நிற்கும்.

(சிவ-சித்-சுப செய்-129)

என்னும் செய்யுளால் அறியலாம்.

## அ.2.5. வினையின் பாரம்

மறுநாள் நாங்கள் வழக்கம்போல் கூடினோம். முந்தின நாள் நான் அவர்களுடன் பேசிக்கொண்டிருந்த போது நாம் செய்யும் வினைகளுக்கெல்லாம் முந்தின சரிதமும் உண்டு. பிந்தின சரிதமும் உண்டு என்று சொன்னது அவர்களுக்கு நன்றாக விளங்கவில்லை என்றார்கள். அவர்களுக்குப் பின்வருமாறு உதாரணத்தின் மூலம் விளக்கம் கூறினேன்.

எங்கள் ஊருக்கு அருகே ஒரு தோட்டம் உண்டு. அது எனக்குச் சேர்ந்தது. என்முன்னோர் எனக்காகச் சம்பாதித்து வைத்த சொத்து. அதை நான் விடமாட்டேன். அதுவும் என்னை விட்டுப் போகாது.

அதில் ஒரு கிணறு வெட்டினேன். அதிலிருந்து நீரை ஏற்றத்தைக் கொண்டு நிலத்திற்குப் பாய்ச்சினேன். என் முயற்சியின் பலனை அந்த நிலம் நல்ல விளைச்-சலாகத் தந்தது. விளைவுப் பொருளை எடுத்து என் உணவிற்குப் பயன்படுத்திக் கொண்டேன். அதில் சிறந்திருந்த ஒரு பகுதியை எடுத்து விதைக்காக அடுத்த பயிருக்கு வைத்துக் கொண்டேன்.

நான் செய்த முயற்சியினால் எனக்குப் புதிய பயிர் விளைந்ததல்லவா? இதுபோல உலகில் நாம் செய்யும் முயற்சியால் புதிய வினைகள் வரும். இங்ஙனம் வருவது ஆகாமியம் எனப்படும்.

இங்ஙனம் விளைந்த பயிரில் கொஞ்சம் அப்பொழுதே உணவாக எடுத்து உண்கிறேனல்லவா. அதுதான் பிராரத்தம் எனப்படும்.

கொஞ்சத்தை எடுத்து அடுத்த விளைச்சலுக்கு உதவும் என்று விதையாகச் சேமித்து வைத்தேனல்லவா. அது-தான் சஞ்சிதம் எனப்படும்,

முன்பு சேமித்து வைத்த விதையிலிருந்து புதிய விளைச்சல். விளைச்சலினால் ஒருபகுதி உணவு. மீண்டும் ஒருபகுதி விதையாகச் சேமிப்பு என இது இப்படியே தொடர்ந்து வருகிறதல்லவா. இதுபோலவே புதிதாக வந்த ஆகாமியமும் அப்பொழுது அனுபவிக்-கின்ற பிரார்த்தமும் அடுத்த புசிப்புக்காக இருக்கும் சஞ்சிதமுமாக வினை தொடர்ச்சியாக வந்து கொண்டே இருக்கும்.

ஒவ்வொரு விளைச்சலிலும் விதைக்காகக் கருத்தூன்றிச் சேமித்துச் சேமித்து வைத்த விதை நெல் அதிகமாக

இருப்பது போல ஒவ்வொரு பிறவியிலும் செய்து அனுபவித்து மிச்சமாகச் சேமித்து வைத்த சஞ்சிதவினை மிக அதிகமாகப் பெரும்பாரமாகத் தேங்கி இருக்கும்.

இந்த மூன்றும் நானே செய்து கொண்ட வினை. ஆகையினாலே இதனை நான் அனுபவித்தே தீர வேண்டும்.

இனி நான் முன் செய்த வினையினையும் அதன் பலனாக இப்போதுள்ள பிறவி எடுத்து அனுபவிக்கிறேன். அவ்விதம் அனுபவிக்கையில் வேறு வினையையும் செய்கிறேன். அதனை அனுபவிக்க மறுபிறவியும் எடுப்பேன். இவ்விதம் செய்யும் வினைகள் உண்மைகளேயன்றிப் பொய்யல்ல. அதனாலேயே நான் பிறப்பு இறப்புக்களில் உழல்கிறேன்.[1]

இனி நிலமானது உழுது பயிர் செய்கிறவனுக்கு அம்முயற்சியின் பயனாகிய விளைவைத் தருதல் போல முதல்வன் எனக்கு என் வினைப்பயனை அளிக்கிறான். காந்தம் இரும்பை இழுக்க வேண்டும் என்றால் அவ்விரும்பை ஒருவன் காந்தத்திற்கு நேரே பிடிக்க வேண்டும். பிடிப்பவன் இல்லாமல் அவ்விழுப்பு நிகழாது.

---

1. *மேலைக்கு வித்து மாகி விளைந்தவை உணவு மாகி*
*ஞாலத்து வருமா போல நாஞ்செயும் வினைக ளெல்லாம்*
*ஏலத்தான் பலமாச் செய்யும் இதம்அகி தங்கட் கெல்லாம்*
*மூலத்த தாகி யென்றும் வந்திடும் முறைமை யோடே*

*(சிவ-சித்-சுப-102)*

அதுபோல் நான் என் வினைப்பயனை அனுபவிப்பதற்கு அப்பயனை ஊட்டும் முதல்வன் வேண்டும்.[2] எனக்கு முதல்வன் அவ்வினைப்பயனை அனுபவிக்க உடல் முதலியவற்றைத் தருகிறான். இது அவன் என்மீது கொண்டிருக்கும் கருணையினாலே தான் நிகழ்கிறது.

ஒரு தகப்பன் தன்மகன் கெட்ட வழிக்குப் போகாமல் இருக்கும்படி திருத்துகிறான். ஒரு நோயாளி சுகம் அடையும் பொருட்டு வைத்தியன் இரணசிகிச்சை செய்கிறான். ஓர் ஆசிரியன் மாணாக்கன் நன்றாகப் படிக்கும் பொருட்டுக் கண்டிக்கிறான். ஒரு திருடன் நல்ல நடத்தை பெறும் பொருட்டு ஒரு நீதிபதி தண்டிக்கிறான். இவைகள் எல்லாம் நல்ல எண்ணத்துடனே அன்றிக் கெடுப்பதற்கு அல்ல. அவை போலவே முதல்வன் நான் செய்த நல்வினை தீவினைக்கு ஏற்ப எனக்குப் பிறவிகளைத் தந்து அனுபவமும் அறிவும் தருகிறான்.[3]

---

2. *உலகுடல் கரணம் காலம் உறுபலம் நியதி செய்தி*
*பலஇவை கொண்டுகன்மம் பண்ணுவ துண்பதானால்*
*நிலவிடா திவைதாஞ் சென்று நினைந்துயிர் நிறுத்திக் கொள்ளாது*
*அலகிலா அறிவன் ஆணை அணைத்திடும் அருளினாலே*

(சிவ-சித்-சுப-112)

3. *நிக்கிர கங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது*
*அக்கிர மத்தாற் குற்றம் அடித்துத்தீர்த் தச்சம் பண்ணி*
*இக்கிர மத்தி னாலே ஈண்டறம் இயற்றி டென்பன்*
*எகக்கிர மத்தி னாலும்இறைசெயல் அருளே யென்றும்*

(சிவ சித்-சுப-செய் 105)

இவ்விதம் என் பிறவிகளுக்கு வித்தாகிய வினைகள் மூன்று விதமாகவும் உள்ள பொருள்களாகவும் இருக்கின்றன என்று அவர்களுக்கு விளக்கிக் கூறினேன். இப்பொழுதுதான் எங்களுக்கு இது நன்றாக விளங்கிற்று

---

*தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தஞ்சொல் ஆற்றின்*
*வந்திடா விடின்உ றுக்கி வளாரினால் அடித்துத் தீய*
*பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடில் பரிவே யாகும்*
*இந்தநீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவும் என்றும்*

*(சிவ-சித்-சுப-செய்-106)*

*ஆணையால் அவனி மன்னன் அருமறை முறைசெய் யாரை*
*ஆணையின் தண்டஞ் செய்தும் அருஞ்சிறை இட்டும் வைப்பன்*
*ஆணையின் வழிசெல் வோருக் கருபதி செல்வம் நல்கி*
*ஆணையும் வைப்பன் எங்கும் ஆணையே ஆணை யேகாண்*

*(சிவ-சித்-சுப-செய்-121)*

*மண்ணுளே சிலவி யாதி மருத்துவன் அருந்தி யோடுந்*
*திண்ணமாய் அறுத்துக் கீறித் தீர்த்திடுஞ் சிலநோ யெல்லாம்*
*கண்ணிய கட்டி பாலுங் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்*
*அண்ணலும் இன்பத் துன்பம் அருத்தியே வினைஅ றுப்பன்*

*(சிவ-சித்-சுப-செய் 125)*

என்று அவர்களும் மகிழ்ச்சியடைந்து வீட்டுக்குச் சென்றார்கள்.

---

*என்னும் செய்யுள் கருத்துக்கள் இங்கு விளக்கப்பட்டன. இதனால் கன்மம் என்ற பொருள் ஒன்று உண்டு என்பதும் அது ஆகாமியம், பிராரத்தம் சஞ்சிதம் என மூவகைப் படும் என்பதும் விளக்கப்பட்டன.*


…ANDAVAR
A. No. 14974
…RARY, KOVILOOR

அ. 2.

# 6. குயவன் தொழில் உதாரணம்

மறுநாள் நாங்கள் ஒன்று கூடி இந்த உலகம் எவ்வாறு படைக்கப்படுகிறது? ஏன் படைக்கப்படுகிறது? என்று பேசினோம். இதற்கும் நான் பின்வரும் உதாரணம் கூறி விளக்கினேன்.

எங்கள் ஊரிலே ஒரு குயவன் இருக்கிறான். அவன் குடத்தை வனைகிறான். அவனுடைய கருவிகள் சக்கரமும் தண்டும் ஆகும். குடம் செய்வதற்குக் குளத்திலிருந்து களிமண்ணை அவன் எடுத்து வருகிறான். அம் மண்ணை நீர்விட்டு நன்றாகப் பிசைந்து அதனைச் சக்கரத்தின் மீது வைத்துக் கழியால் சுற்றித் தன் விரல்களின் திறமையினால் குடமாக ஆக்குகிறான். இத்தொழிற்கு முதற்காரணம் களிமண். துணைக்

காரணம் சக்கரமும் தண்டும் நிமித்த காரணம் குயவன், பலன்-குடம். இம்மூன்று காரணங்களும் இல்லாமல் குடம் ஆகாது. ஒன்று குறைந்தாலும் குடம் ஆகுமா?

உயிர்களாகிய நாம் உலகத்திலே பிறவி எடுக்கிறோம். இவ்வுலகத்திற்குக் குயவன் போல நிமித்த காரணன் முதல்வன். சக்கரம் தண்டு போலத் துணைக்காரணம் அவனுடைய ஆணையாகிய சத்தியும் அதன் வழி செயற்படும் நல்வினை, தீவினைகளும். மண்போல முதற்காரணம் மாயை. இதன் விளைவாகிய குடம் போல நமது உடலும் உலகும் என்று அறிக.[1]

குடம் வனையும் தொழில் இயக்கத்தில் முதற்காரண-மாகிய மண்ணும் துணைக்காரணமாகிய சக்கரமும் நிமித்தகாரணமாகிய குயவனும், இன்றியமையாதன ஆதல் போல, உலகுக்கு முதற்காரணமாகிய மாயையும் துணைக்காரணமாகிய இருவினைகளும் இன்றியமையா-தவை. இவை நிமித்தகாரணனைப்போல் என்றும் உள்ள பொருள்கள். ஆனாலும் மண்ணும் சக்கரம் முதலி-யனவும் குயவனால் மாறுபடுதல்போல முதல்வனால் மாயையும் வினையும் மாறுபடுகின்றன.

---

1. *காரிய காரணங்கள் முதல்துணை நிமித்தம் கண்-டாம்*
*பாரின்மண் திரிகை பண்ணு மவன்முதல் துணை நிமித்தம்*
*தேரின் மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக*
*ஆரியன் குலால னாய்நின்று ஆக்குவன் அகில மெல்லாம்*
*(சிவ-சித்-சுப-38)*

என்னும் செய்யுள் கருத்து இங்கு விளக்கப்பட்டது.

குயவன் தன் ஜீவனத்தின் பொருட்டுப் பல குடங்-களைச் செய்கிறான். முதல்வன் உயிர்களுக்குப் பல உடல்களைப் படைப்பது என்ன காரணம்? அவன் அளவில்லாத இன்பமுடையவன், செல்வமுடையவன். தன்பொருட்டாக இவ்வுடல்களைப் படைப்பதில்லை. உயிர்கள் பொருட்டாகத்தான் படைக்கிறான்.[1]

அவை மறைப்பால் கட்டுண்டு கிடக்கின்றன அம்-மறைப்பு ஆணவம் எனப்படும். அதனால் உயிர்கள் நிமித்த காரணமாகிய முதல்வனையறிவதில்லை. முதல்வன் பேரிரக்கமுள்ளவன். அவன் அவ்வுயிர்கள் மேல் வைத்த கருணையினால் அம்மறைப்பை நீக்கும் பொருட்டு அவற்றுக்கு உடல் உலகம் முதலியவற்றைப் படைத்துக் கொடுக்கின்றான் என்றேன்.

இவ்வளவு பெரிய விஷயத்தை இவ்வளவு எளிமையான உதாரணத்தில் வைத்துக் கூறியதால் அவர்களுக்கு மிக நன்றாக விளங்கிற்று மிகுந்த மகிழ்ச்சியுடன் வீட்டிற்கு சென்றார்கள்.

1. *சொன்னஇத் தொழில்கள் என்ன காரணந் தோற்ற என்னின்*
*முன்னவன் விளையாட் டென்று மொழிதலும் ஆம்உ யிர்க்கு*
*மன்னிய புத்தி முத்தி வழங்கவும் அருளான் முன்னே*
*துன்னிய மலங்க ளெல்லாந் துடைப்பதுஞ் சொல்ல லாமே*
*(சிவ-சித் சுப-செய்56)*

*என்னும் செய்யுள் கருத்து இங்கு விளக்கப்பட்டது.*

# அ.2.7. தளை உண்டு

முதல்வன் ஒருவன் உண்டு என்று ஆராய்ந்த நாம் அவனைக் காணவொட்டாமல் தடுத்துக் கொண்டிருக்கும் தளை அல்லது கட்டு ஒன்று உண்டோ? அது எது? என்று விசாரிக்கத் தொடங்கினோம். அல்லவா? அதன் முடிவாக நாங்கள் அடைந்த கருத்துக்களை ஒன்று சேர்த்து உரைத்துக் கொண்டோம்

அவையாவன. முதல்வன் முழு அறிவு படைத்தவன். நாமோ குறைவுள்ள அறிவுபடைத்தவர்கள். எங்களுக்கு உள்ள குறைவான அறிவாலும் எங்கள் சாதனங்களாலும். அவனை அறிய முடியவில்லை. அப்படிப்பட்ட குறைபாடு நீங்குவதற்குத் தன் கருணையினால் முதல்வன் எங்களுக்கு உடல் முதலியவைகளைத் தந்து

அறிவு வளர்த்துத் தருகிறான். அதனால் உலகில் பிறப்புக்கள் எடுக்கிறோம். பின்னர் இறக்கிறோம்.

அறிவு முதிர முதிர மேலுக்கு மேல் செல்லுகிறோம். இந்தப் பிறப்புகளில் பல வினைகள் செய்கிறோம். அவ்வினைகளை அனுபவிக்கும் வகையில் புதுவினைகளைச் செய்து மறுபிறப்புக்கு வழி தேடிக்கொள்கிறோம்.

மேலும் நாங்கள் வினைவழியாக முதல்வன் கருணையினால் அவன் ஆணையிட உடல்களைப் பெற்றிருக்கிறோம். அவைகள் மாயை என்னும் மூலப்பொருளிலிருந்து படைக்கப்பட்டவை. இதுவேயன்றி நம்மை அடக்கிவைத்திருக்கும் மூலமலமும் அல்லது ஆணவ மலமும் உண்டு. இந்த மூன்று பொருள்களாகிய மலம், வினை, மாயை இவைகளைத் தளை அல்லது கட்டு என்று அறிந்தோம்.[1]

---

1. *மோகம்மிக உயிர்கள் தொறும்உடனாய் நிற்கும்*
   *மூலஆணவம் ஒன்று முயங்கி நின்று*
   *பாகம்மிக உதவு திரோதாயி ஒன்று*
   *பகர்மாயை ஒன்று படர்கன்மம் ஒன்று*
   *தேகமுறு கரணமொடு புவன போகச்*
   *செயலாகும் மாமாயைத் திரட்சி ஒன்று*
   *ஆகமலம் ஐந்தென்பர் ஐந்தும் மாறாது*
   *அருள்என்பது அரிதென்பர் அறிந்து ளோரே*
   *(சிவப்-செய் 32)*

*என்னும் செய்யுளால் தளைகள் இவை என அறியலாம்.*

*இதுவரை மலங்கள் உள்பொருள் என்பது விளக்கப்பட்டது. மலம் காரணமாக உயிர்களுக்குப் பிறப்பு இறப்புக்களைக் கொடுக்கும் தொழிலைச் செய்வது இறைவனுக்கு இயல்பு என்பதும் உணர்த்தப்பட்டது.*

# அ. 3. நானும் இருக்கின்றேன் அல்லவா

## அ.3 - 1. இருவகைப் பொருள்கள்

எங்கள் கூட்டத்தில் நடந்த பேச்சுகளிலே முதலில் முதல்வன் உண்டு என்றும் பிறகு அம் முதல்வனைக் காணவொட்டாமல் என்னைத் தடுக்கிற தளை ஒன்று உண்டு என்றும் ஆராய்ந்து முடிவு செய்தோம். பிறகு அம்முதல்வனை அறியவேண்டும் என்று அவா இருந்தும் அவனை அறியாதே நான் இருக்கிறேன் அல்லவா! என் நிலைமை என்ன? என்று தர்க்கம் செய்யத் தொடங்கினோம்.

குளிர் இல்லாத போது பனியில்லை. குளிர் உள்ள போது பனி உண்டு என்று அறிவோம்.[1] அது போல உடலில் இயக்கம் இல்லாத போது உயிர் இல்லை. உடலில் இயக்கம் இருக்கிற போது உயிர் உண்டு என்று அறிதல் வேண்டும். அந்த உயிரே நான் எனப்படுவது என்று எங்களில் ஒருவன் சொன்னான்.

அந்த நான் அறிவுப்பொருள், வெறும் உடலோ அறி-வில்லாத பொருள். ஆகவே உலகில் இருவகைப் பொருள் கள் உண்டு. ஒருவகை : அறிவே இல்லாத பொருள்கள்; அவைகளுக்கு இயக்கம் இல்லை. கல், மலை, ஆறு, முதலியன. மற்றொருவகை : அறிவுள்ள பொருள்கள். உடலோடு கூடியவை. மரம், செடி, விலங்கு, பறவை, மனிதன் முதலியன.

இவைகளின் உடல்கள் அறிவில்லாதவை, உயிர்கள் அறிவுள்ளவை என்று தர்க்கித்தோம். ஆனால் சில ஐயங்கள் தோன்றின.

1. இவை அநுபலப்தி, உபலப்தி என்று அளவை நூலில் சொல்லப்படும். இவை அனுமான அளவைக்குரிய ஏதுவின் வகைகள். அநுபலப்தி என்பது இன்மையை அறிவிக்கும் ஏது. உபலப்தி என்பது உண்டு என்பதை அறிவிக்கும் ஏது.

# அ.3-2. முதல் ஐயம்

எனது நண்பன் ஒருவன், உடலைவிட்டு உயிரைத் தனியாகக் காண முடியாதே. ஆகவே உயிர் இல்லை என்று ஏன் சொல்லக் கூடாது என்றான்.

அடுத்த வீட்டுப் பாட்டியம்மாள் இறந்தாள். அது வரை -யில் உன்னைத் திட்டிக் கொண்டிருந்தவள் இறந்த பிறகு திட்டினாளா! இறந்த உடலைச் சுட்டு விட்டார்-களே. இரண்டு நிலைகளுக்கும் மாறுபாடு இல்லையா? இறந்த உடலில் இல்லாத உயிர், இறப்பதன் முன் இருந்ததல்லவா? என்றேன்.

மேலும், இல்லை என்ற பொருளுணர்வோடு சொல்லப்-படும் ஒன்று அப்பொருள் இருந்தது என்ற உணர்ச்சியைத் தருகிறதில்லையா?

குளிர்நாட்டில் யானை இல்லை என்றால் உஷ்ணப்-பிரதேசத்தில் யானை உண்டு என்று பொருள் படுவ-தில்லையா? ஆகவே, உயிர் இல்லை என்று நீ சொன்-னால் உயிர் என்பது ஒன்று உண்டு; அது இப்போது இந்த உடலில் இல்லை என்று பொருள் ஆவதில்லையா? என்றேன்.[1]

மேலும், உடல் உயிரல்ல, தலை உயிரல்ல, கால் உயிரல்ல என்று சொல்லிப்போனால் உயிர் உடலில் எங்கு இருக்-கிறது. ஆகவே உயிர் இல்லை என்று ஏன் கூறக்கூடாது என்று மீண்டும் அவன் கேட்டான்.

உடலிலுள்ள ஒவ்வொரு உறுப்பும் உயிர் அல்ல என்று சொல்லுவதினால் மட்டும் உயிர் இல்லை என்று கூற-முடியாது. கால் உயிரன்று; தலை உயிரன்று என்று தனித்தனி சொல்லிக் கழித்துக் கொண்டு நிற்கும் ஒரு பொருள் உண்டல்லவா? அதுவே உயிர் என்றறி என்றேன்.

உயிர் பருப்பொருள் அல்ல. அது அறிவுப்பொருள். அதனை இந்த ஊனக்கண்ணால் காண முடியாது. காதால் கேட்க முடியாது. மற்றப்புலன்களாலும் அறிய முடியாது. அது அறிவுப் பொருளாதலினால் அந்த அறிவே உயிராக விளங்கும். ஆகவே நீ இல்லை என்று சொன்னதினாலேயே அது உண்டு என்று உணரப்படும்

---

1. ''இனி ஆன்மா உளது என்றது''- இலது என்றலின்; எவற்றினையும் அன்று அன்று என விட்டு ஆன்மா இலது என்று நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் (சிவ - போத - சூ - 3 - அதி - 1) என்னும் கருத்து இங்கு விளக்கப்படுகிறது இது சூனிய ஆன்மவாத மறுப்பு

எல்லாவுறுப்புக்களும் நான் இல்லை என்று கழித்த காரணத்தால் இறுதியில் ஒன்றுமில்லை என்ற நிலை தோன்றும்.

அந்தச் சூன்ய நிலையை அறிவதாகிய நீ என்ற அறிவுப் பொருளே உயிர் ஆகும்.

# அ.3 - 3. இரண்டாவது ஐயம்

மற்றொரு நண்பன் இந்த உடலே உயிர் அல்லது ஆன்மா என்று ஏன் சொல்லக் கூடாது? முருகா என்று அழைத்-தால் முருகன் என்ற பெயருள்ள உடல்தானே ஏன் என்கிறது என்று கேட்டான்.

சரி அவன் இறந்துவிட்டால் ஏன் என்கிற பிரதிமொழி இல்லையே! எங்கே உயிர் இருக்கிறது? முருகன் ''எனது உடல்'' என்று சொன்னால் உடலை விட்டுத்தான் தனி-யாக இருப்பதான உணர்ச்சியிலேதான் சொல்லுகிறேன்.

என் வீடு என்று சொன்னால் வீடு என்பது சொன்ன வனது சொத்தாகும். சொத்துவேறு அவன் வேறு ஆகுமல்லவா. அதுபோல எனது உடல் என்று முருகன்

சொன்னால் எனது என்ற ஓர் உணர்ச்சியே அவனுடைய உயிர் உடலிலிருந்து வேறு என்று காட்டவில்லையா''[1] என்றேன்.

'ஆனால் ஒரு அடிபட்டவுடன் முருகன் எனது உயிர் போகிறது என்று கத்தினால் அதற்கு என்ன பொருள்' என்று தர்க்கித்துக் கேட்டான். அங்கே உயிர் என்பது வாழும் நிலை என்ற பொருளில் அவன் கூறுகிறான். ஆன்மா என்ற நுட்ப அறிவுப்பொருளை அவன் உணருகிறதில்லை.

ஆகவே உடல் வேறு, உயிர் வேறு என்று அறிய வேண்டும் என்று விடை கூறினேன்.

---

*1. இனி எனது உடலென்றலின் ஆன்மா உளது: என்பதி, என் மனை, என்றாற்போல என் கை, என் கால் என நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.*

*(சிவ·போத-சூ-3-அதி-2)*

*இது தேகான்மவாத மறுப்பு.*

# அ. 3 - 4. மூன்றாவது ஐயம்

உயிர் அறிவுப் பொருள். உணரும் தன்மை உடையது என்றால் காது, மூக்கு, கண், நாக்கு இவைகள் உணரு-வதில்லையா? அவைகள் ஏன் உயிர் ஆகமாட்டா? என்று மற்றொருவன் கேட்டான்.

'காது, மூக்கு முதலிய பொறிகள் ஒலி, மணம் முதலிய-வைகளை அறிவதில்லை. அவைகளுக்குள்ளே இருந்து ஒன்று அறிகிறது. மேலும் காது கேட்பதன்றி மோப்பம் பிடிக்குமோ? கண் பார்த்தலன்றி ஓசை கேட்குமோ? ஆகவே ஒன்று மற்றொன்றைச் செய்யாது.

ஆதலினாலும் இப்புலன்களிலிருந்து உயிர் வேறுஆகும்'[1] என்றேன்.

---

1. "இனி ஐம்புலனறிதலின் ஆன்மா உளதென்றது". ஐம்புலனாகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை ஒன்றறிந்தொன்றறியாமையின் இவ்வைந்தினாலும் ஐம்பயனும் அறிவது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் (சிவ-போத-சூ-3-அதி-37) என்னும் கருத்து இங்கு விளக்கப்படுகிறது.

இது இந்திரியான்மவாத மறுப்பு.

# அ,3 - 5. நான்காவது ஐயம்

இரவிலே நாம் நன்றாகத் தூங்கும் பொழுது கனவு காண்கிறோம். அப்போது கண், வாய் முதலிய ஐந்து புலன்களும் வேலை செய்வதில்லை. இருந்தாலும் கனவில் நாம் நுண்ணுடம்பினால் நடமாடுகின்றோம். அந்தக்கனவில் நமது நுண்ணுடம்பு அகக்கருவிகளைக் கொண்டுதொழில்செய்யும், ஆதலின் அந்நுண்ணுடம்பே உயிராகாதா! என்று ஒருவன் கேட்டான்.

கனவில் நிகழும் செய்திகளைப் பற்றிச் சிறிது எண்ணு-வோம். கனவிலே காணும் காட்சிகளில் ஒரு சிறி-தளவோ அல்லது முழுமையோ நனவிலும் நினைவிற்கு வருகிறது. சில சமயங்களில் ஒரு பாதி தெளிவாகவும் மற்றொரு பாதி மயக்கமாகவும் அறிவதுண்டு. கனவில்

தொழில்பட்ட நுண்ணுடம்பே உயிராயின் அதுவே தூல உடம்பையும் தொழிற்படுத்த வேண்டுமல்லவா? அப்படி -யாயின் கனவில் நிகழ்ந்தவற்றை நனவிலும் அப்படியே அறிய வேண்டுமல்லவா? அங்ஙனம் அறியவில்லையே.

ஆகலின் கனவில் நுண்ணுடம்பைச் செலுத்தி அறிகிற அறிவே நனவிலும் அறிவிக்கும். நனவு கனவுகளில் உயிர்க்குக் கருவிகள் கூடுதலாகவும் குறைவாகவும் இருப்பதனால் மயங்கி அறிகிறது. ஆதலின் நனவில் உடலுக்குப் புறம்பாக இருக்கும் அறிவே கனவிலும் புறம்பாக இருந்து அறியும் என்றாகிறது. இந்தக் காரணத்தினால் அறியும் உயிர் கனவில் காணும் நுண்ணிய உடம்பிலும் வேறு என்று தெளிவு படுத்தினேன்[1]

---

1 'ஒடுக்கம் அறிலின் ஆன்மா உளது'' நனவின் கண் கனவு கண்டாம் என்றும் கண்டிலம் என்றும் நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் (சிவ-போத-சூ 3-அதி-4) என்னும் கருத்து இங்கு விளக்-கப்பட்டது.

இது சூக்குமதேகான்மவாத மறுப்பு.

## அ. 3 - 6. ஐந்தாவது ஐயம்

நாம் வெகு நன்றாக உறங்கும் போது கனவும் காணாமல் அயர்ந்து தூங்குவது உண்டு. அந்த நிலையைச் சுழுத்தி நிலை என்பார்கள் பெரியோர்கள். அப்போது உடல், உடலினுடைய புலன்கள், நுண்ணிய உடல் இவைகள் எல்லாம் ஒடுங்கி இருக்கும். ஆனால் பிராணவாயு ஒன்று மாத்திரம் தொழில் புரியும். அது உயிர் ஆகாதா? என்றான் மற்றொரு நண்பன்.

உடல், நுண் உடல் முதலியவைகள் ஒடுங்கிப் போன போது பிராணவாயு சஞ்சரித்துக் கொண்டிருக்கும். ஆனால் அது இன்பதுன்பங்களை அநுபவியாது. இன்ப

துன்பங்களையறிகின்ற உயிர் பிராணவாயுவினும் வேறு என்று அதற்கு விடை கூறினேன்.[1]

1 இனி கண்படில் உண்டிவினை இன்மையின் ஆன்மா உளதென்றது. ஒடுங்கின விடத்து இன்பத்துன்பஞ் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காத விடத்து இன்பத்துன்பஞ் சீவியாநிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது (சிவ போத-சூ-3 அதி-5 ) என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது. இது பிராணான்மவாத மறுப்பு.

# அ.3 - 7. ஆறாவது ஐயம்

உடலும் நுண்ணுடலும் பிராணவாயுவும் உயிர் ஆகா என்று சொல்லலாம். எங்கும் விரவியிருக்கும் முதல்வன் உடலின் கண்ணும் இருப்பான் அல்லவோ. அப்படி-யாயின் அவன் உயிர் அல்லவா என்று மற்றொருவன் கேட்டான்.

உயிரும் முதல்வனும் அறிவுப் பொருள்களே ஆயினும் இரண்டு அறிவுகளும் வெவ்வேறு தன்மையன. உயிரின் அறிவு உடலோடு கூடியவழி விளங்கி இருக்கும். கூடாத போது மயங்கி இருக்கும். முதல்வன் அறிவோ எப்-போதும் ஒரே தன்மையில் விளங்கி நிற்கும். உயிர்க்கு உணர்த்துகிறவன் முதல்வன். உணர்த்தினால் மட்டும்

உயிர் உணரும். ஆகவே இப்பேதம் உள்ளதினால், உயிர் முதல்வனின்றும் வேறு என்று விரித்துரைத்தேன்[1]

---

1. "இனி உணர்த்த உணர்தலின் ஆன்மா உள-தென்றது" - அவன் அறிந்தாங்கு அறிவன் என்று அறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பது உள-தாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது (சிவ-போத-சூ-3-அதி-6) என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது. இது விஞ்ஞான ஆன்மவாத மறுப்பு.

# அ.3 - 8. ஏழாவது ஐயம்

இப்படி நாங்கள் ஒவ்வொரு கருத்தையும் மறுத்துக் கொண்டு வந்ததைக் கண்ட ஒருவன் தனித்தனியே ஒவ்வொன்றை உயிர் என்று சொன்னால் பொருந்தாது. எல்லாம் சேர்ந்ததே உயிர் என்று சொன்னால் பொருத்தமாயிருக்குமே என்றான்.

ஐம்பொறி, ஐம்புலன், மனம் முதலியன எல்லாம் தனித்தனியே என்ன பெயர்களைப் பெறுகின்றனவோ அப்பெயரையே அவை தம்முள் கூடிய பொழுதும் பெறுகின்றன; வேறு பெயர் பெறுகின்றன என்று சொன்னாலும் அவை உயிர் என்று பெயர் பெறாமல் தூல உடம்பு, சூக்கும உடம்பு என்றே பெயர் பெறு-கின்றன ஆதலின் இந்தக் கருத்தும் பொருத்தமாக

இல்லையே என்று நான் மறுத்துக் கூறினேன்.[1] வேறு என்ன சொல்வதென்று விளங்கவில்லை. மேலும் சிந்திக்கலாம் என்று அந்த அளவில் கலைந்து சென்றோம்.

---

1. *"மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது" அவைதாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான் (சிவ-போத-சூ-3-அதி-7) என்னும் கருத்து இங்கு விளக்கப் பெறுகிறது.*

*இது சமூக ஆன்மவாதிகளுக்கு மறுப்பு*

# அ. 3 - 9. எட்டாவது ஐயம்

அடுத்த நாள் நாங்கள் சந்தித்தோம். அப்பொழுது பந்தாடப்போகலாம் என்று நினைக்கிறேன் என்று நான் அவர்களிடம் சொன்னேன். நீ நினைக்கிறாயா? உன் மனம் நினைக்கிறதா? என்று எங்கள் கூட்டத்-திலிருந்த ஒருவன் கேட்டான். நான் வேறு; என்மனம் வேறு என்பதில்லை. மனமே நான்; நானே மனம் என்று வேறு ஒருவன் பதில் கூறினான்.

இன்னொருவன் இப்பொழுது பனிபெய்கிறது; பனியில் விளையாடினால் சளி பிடித்துக் கொள்ளுமோ என்று சந்தேகப்படுகிறேன் என்றான். விளையாடுவோம்; சளி பிடிக்கிறதா என்று பார்ப்போம் என்று இன்னொருவன் சொன்னான். பனி சீக்கிரம் கலைந்துவிடும். அதுமட்டு-மல்ல; விளையாடினால் உடம்பில் சூடு பிறக்கும்; சளி பிடிக்காது. ஆகையினால் விளையாடலாம் என்று முடிவாகக் கூறினான்.

இந்த உரையாடலிலிருந்து எங்களுக்கு ஓர் ஆராய்ச்சி தோன்றிற்று. நான் நினைக்கிறேன்; சந்தேகப்படுகிறேன் செய்து தான் பார்ப்போமே என்று ஊக்கம் கொள்கிறேன்; செய்வேன் என்று முடிவு செய்கிறேன். இவற்றையெல்லாம் நானே செய்கிறேனா? இல்லை, என் மனம் செய்கிறது. மனம் அறிவுடையதோ என்றால் இல்லை.

மனம் கண் முதலியன போல ஒரு கருவிதான். கண் முதலியன வெளியிலிருக்கும் கருவி. மனம் உள்ளே இருக்கும் கருவி. மனம் செயல்படும் விதத்திற்குத் தகுந்தாற்போல் வெவ்வேறு நிலையுடையதாய் மனம், சித்தம், அகங்காரம், புத்தி என வெவ்வேறு பெயர் பெறும்.

நான் எனப்படும் உயிர் இந்த உள்கருவிகளைக் கொண்டு ஒவ்வொன்றையும் அறிந்து அனுபவிக்கும். ஆகவே ஆன்மா இவற்றின் வேறான உள்பொருள் என்று முடிவு செய்தோம்.[1]

---

1. *''ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோ புத்தி அகங்கார சித்தங்களின் ஒன்றன்று என்றது'' (சிவ - போத - சூ - 4 - அதி - 1 -) என்பதன் விளக்கம். இது அந்தக்கரண ஆன்மவாதிகளுக்கு மறுப்பு*

*'நானும் இருக்கிறேனல்லவா' என்பது முதல் இதுவரை ஆன்மா என்னும் பொருள் ஒன்று உண்டு என்பது விளக்கப்பட்டது.*

*இதுவரை கூறப்பட்டவை சைவசித்தாந்த சாத்திரங்களில் பிரமாண இயல் என்னும் பகுதியில் பேசப்படும் செய்திகள் என அறிதல் வேண்டும்.*

அ.3.

# 10. உயிரின் உண்மை நிலை

அடுத்த நாள் வழக்கம்போல் கூடினோம். முன்னை நாளில் செய்த விவாதத்தையெல்லாம் சுருக்கமாகச் சிந்தித்து உயிர் உடம்பு முதலியவற்றின் வேறாய்த் தனித்த முதலாய் உடம்பில் இருந்து உடம்பை இயக்கிக் கொண்டிருக்கிறது என்று முடிவு செய்தோம். இந்த ஆராய்ச்சி முடிவைச் சுருக்கமாகக் குறிப்போம்.

நான் என்பது உயிர். இது என் உடலில், இருக்கிறது. நான் உடல் அல்லன். புலன்களல்லன். நுண்ணுடல் அல்லன். பிராணவாயு அல்லன். முதல்வனும் அல்லன். உடல் அவையவங்கள் எல்லாம் சேர்ந்ததனால் ஆனவனும் அல்லன். அந்தக் கரணங்களுமல்லன்.

இவற்றின் வேறான நான் தனித்த உண்மைப் பொருளாக அறியும் பொருளாக இருக்கிறேன். உடல்முதல் பிராண வாயு ஈறாக உள்ள கருவிகள் எனக்கு அறிவும் அநுபவமும் உண்டாவதற்கு உதவுகிற - பொருள்கள்.

இவ்வித ஆராய்ச்சிகள் செய்த எங்கள் கூட்டம், முதல்வன், தளை, உயிர் (பதி, பசு, பாசம்) என்ற முப்பொருள்களின் நிலைகளை உணர்ந்து அவைகள் என்றும் இருப்பவைகள் என்று உறுதி செய்து கொண்டது. ●

# ஆ. அப்பொருள்கள் எப்படிப்-பட்டவை

## ஆ - 1. நானும் என்போலியவர்களும் எப்படிப்பட்டவர்கள்

### ஆ.1.1. எனக்கு ஏற்பட்ட நிலைகள் யாவை

நான் உடலும் அல்லன்; உடலில் உள்ள மெய்வாய் முதலிய புலன்களும் அல்லன்; நுண்ணிய உடலும் அல்லன்; பிராணவாயும் அல்லன்; முதல்வனும் அல்லன்; எல்லாம் கூடிய கூட்டமும் அல்லன்; அந்தக்கரணங்களும் அல்லன். நான் இவைகளுக்கு வேறாய் இருப்பவன்; என்றும் உள்ளவன்; அறிவு மயமானவன் என்று இதுவரை பேசி முடிவுசெய்த நாங்கள் இதன்பின் என்னுடைய நிலைகள் என்ன என்று ஆராய்ந்தோம்.

அநாதியில் - அதாவது உடம்பு முதலியவற்றை முதன் முதலாகப் பெறுவதற்கு முன் மறைப்புச் சக்தியால் அறிவு விளங்காமல் கிடந்த நிலை ஒன்று. பின்னர் என் கன்மம் காரணமாக இறைவன் மாயை என்னும் பொருளிலிருந்து உடம்பு, உலகம் ஆகியவற்றைப் படைத்துக் கொடுத்தபின் அறிவு சிறிதே விளங்கிய நிலை ஒன்று என இரண்டு நிலைகள் இருக்கின்றன என்பது முன்னமே முடிவு செய்யப்பட்டது.

அவைகள் நீங்கிவிட்டால் நான் என்ன நிலையில் இருப்பேன்? என்ற கேள்வி கேட்டுச் சிந்தித்தோம். என்னைக் கட்டுப்படுத்தி இருக்கிற தடையாகிய மூன்று தளைகளும் (மலங்களும்) நீங்கித் தனியே இருந்தால் நான் சுத்த நிலை[1] அல்லது தூய நிலையில் இருப்பேன்.

அறிவே மயமாக நான் அப்போது முதல்வனையும் அறிவேன். என்னைக் கட்டுப்படுத்திய தளைகளையும் அறிவேன். இது ஒரு நிலை. இதனை அடையத்தான் எல்லா உயிர்களும் முயற்சி செய்கின்றன. முதல்வனும் அருளுகின்றான். ஆனால் உயிர் உடலினின்றும் தனித்து நிற்கும்போது அதனை அனாதியாக மலம் அல்லது

---

*1. சுத்தநிலை-மலங்கள் நீங்கிய நிலை. இந்நிலையில் ஆன்மாவின் சிற்றறிவு நீங்கும். அதனிடத்துச் சிவஞானம் விளங்கும். அது சிவனடியைப் பொருந்திச் சிவாநுபவத்தை அநுபவிக்கும். இதனைக்*

*"குருஅருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத் திரிமலம் அறுத்துப் பண்டைச் சிற்றறிவு ஒழிந்து ஞானம் பெருகிநா யகன்தன் பாதம் பெறுவது சுத்த மாமே"*

*என்னும் சிவஞான சித்தியாரான் (செய்-230) உணர்க.*

ஆணவம் என்ற இருட்டுச் சூழ்ந்து கொண்டிருக்கிறது என்று முன்பு கூறினோமல்லவா; அந்த இருட்டு முதல்வனைக் காண ஒட்டாமல் தடுத்து நிற்கிறது.

அந்நிலை சிறிதும் அறிவு விளங்காது நிற்கும் நிலையாகும். அந்த நிலை கேவலநிலை[1] என்று பெயர் பெறும். மேலும், நான் உடலோடு இருந்து உட்கரணங்களோடும் புறக்கரணங்களோடும் இணைந்து அவைகளினால் உதவி புரியப்பட்டபோது எனது நிலை சகல நிலை[2] எனப்படும். அந்தச் சகலநிலையில் இருக்கும் போது எனக்கு முதல்வனும் தெரியமாட்டான். தனையும் தெரியாது.

---

*1. கேவலம்-தனித்து நிற்கும் நிலை. அதாவது கருவி கரணங்களுடன் கூடாது நிற்கும் நிலை. இந்நிலையில் ஆன்மாவுக்கு அறிவு, வடிவம், குணம், தொழில் எதுவும் இல்லை இங்குக் கூறப்பட்டது அநாதி கேவலநிலை எனப்படும். இதனை*

*அறிவிலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்க ளோடுஞ்*
*செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்கள் இல்லான்*
*குறியிலன் கருத்தா அல்லன் போகத்திற் கொள்கை யில்லான்*
*பிறிவிலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தில் ஆன்மா*

*என்னும் சிவஞான சித்தியாரான் (செய்-228) உணர்க.*

*2 சகலம் - கலை முதலியவற்றுடன் கூடிய நிலை. இந்நிலையில் அறிவு சிறிது விளங்கும். குணம் தொழில் முதலியன உளவாம். பல பிறப்பு இறப்புக்களும் உளவாம் இதனை*

கன்மப் பயனாகிய இன்ப துன்ப அனுபவம் மட்டும் இருக்கும். கன்மம் அனுபவித்துக் கழிந்தால் சுத்தநிலை ஏற்படும். மேல்பிறப்பு இல்லையாகும். ஆகவே எனக்கு மூன்றுநிலை உண்டு. அவை தூயநிலை, கேவலநிலை, சகலநிலை என்பன. கேவலத்திலிருந்து சகலத்திற்கும், அதனினின்றும் தூய நிலைக்கும் நான் செல்வேன்.[3] இதுதான் நான் செய்யத்தக்க புனிதயாத்திரை. இந்த யாத்திரையைத் தான் எல்லா உயிர்களும் செய்ய முயல்கின்றன. இதனையே சிவபுரயாத்திரை என்று சமய சாத்திரங்கள் கூறுகின்றன என்று என் நண்பர்களுக்கு விளக்கிக் கூறினேன். ●

---

*உருவினைக் கொண்டு போக போக்கியத் துன்னல் செப்பல்*
*வருசெயன் மருவிச் சத்தம் ஆதியாம் விடயந் தன்னில்*
*புரிவதுஞ் செய்திங்கு எல்லா யோனியும் புக்கு ழன்று*
*திரிதருஞ் சகல மான அவத்தையில் சீவன் சென்றே.*

என்னும் சிவஞான சித்தியாரான் (செய்-229) உணர்க.

3. *கேவல சகல சுத்தம் என்றுமுன் றவத்தை ஆன்மா*
*மேவுவன் கேவ லந்தன் உண்மைமெய் பொறிகள் எல்லாங்*
*காவலன் கொடுத்த போது சகலனாம் மலங்கள் எல்லாம்*
*ஒவின போது சுத்தம் உடையன்உற் பவந்து டைத்தே.*

*என்பது சிவஞான சித்தியார் (சுபக்கம்-செய் 227) இவை மூன்றும் காரண அவத்தை எனப்படும். இவற்றின் வேறாக ஜாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம், என ஐந்து அவத்தைகள் உள்ளன. அவை காரிய அவத்தை எனப்படும்.*

## ஆ.1.2. என்கேவலநிலை

நான் உடலோடு கூடி இருக்கிறேன். உலகத்தில் எல்லாக் காரியங்களையும் அதனைக்கொண்டு செய்து வருகிறேன். உடல் என்னைச் சேராதபோது நான் தனியாக ஆணவத்தால் கட்டுண்டு இருக்கும்போது என் நிலை கேவல நிலை என்று சொன்னேனே அந்நிலை எப்படிப்பட்டதென்று மறுநாள் கூடி ஆராய்ந்தோம்.

மனிதனுக்குக் கண் உண்டு. அக்கண்ணினால் எதையும் நன்றாகப் பார்க்கிறான். அவனுக்குக் கண்ணில் படலம் படர்ந்திருந்தால் அவனால் பக்கத்தில் இருக்கும் பொருளையும் காண முடிவதில்லை. முன்னே சிறு பொருள் களையும் காண முடிந்தது.

அதுபோல நான் கேவல நிலையில் இருக்கும் போது எனக்கு ஆணவம் என்ற ஒரு நோய் பீடித்திருந்தது. அது என் அறிவை மறைத்திருந்தது. அந்த நோய் விரிவான போது என் அறிவைக் குறுக்கி என்னை அணுவாகச் செய்தது.

அதனால் அதற்கு ஆணவம் என்று பெயர். அவ்வாணவம் நீங்குவதற்காகவே முதல்வன் எனக்கு உடம்பு முதலிய வற்றைக் கொடுக்கிறான். உடம்பு முதலியவற்றைப் பெற்ற பின்னும் அவ்வப்பொழுது ஆணவம் மேலிட்டு அறிவை மறைப்பதுண்டு.

திருவெண்ணெய் நல்லூரில் ஞானி ஒருவர் இருந்தார். அவரோ குழந்தை உருவத்தில் இருந்தார். இருந்தாலும் மெய்யைக் கண்டவர் ஆனதினாலே மெய்கண்டார் ஆனார். அவ்வற்புதக் குழந்தையைக் காணப் பல அறிஞர்கள் வந்தார்கள். அதில் ஒருவர் அக்குழந்தையின் தகப்பனாருக்கே குருவாக இருந்தவர். வயதானவர். சகல ஆகமங்களையும் படித்துக் கரைகண்ட படிப்பாளர்.

குழந்தையைக் கண்டவுடன் செருக்கு ஏற்பட்டு இக்-குழந்தையா ஞானம் பெற்றிருக்கும்! என்று சற்று அவமதிப்புக் கொண்டார். தன் படிப்பின் பெருமையை எண்ணிச் சிறிது செருக்குடன் அக்குழந்தையை விளித்து, குழந்தாய்! ஆணவம் என்பது யாது? என்று கேட்டார். குழந்தையோ சிறிதேனும் மனம் கலக்கம் இன்றி ''எதிரே நிற்கிறதே அதுவாகிய நீர்தான்'' என்றது. அவ்விடை அவரைத் தூக்கி வாரிப் போட்டது. நாராசம் போல அவர் செவியில் நுழைந்து இதயத்தைத் துளைத்து அவருடைய ஆணவத்தையே போக்கடித்தது.

உடனே அக்குழந்தையின் அடிகளில் விழுந்து அக்-குழந்தைக்கு மாணாக்கர் ஆகிவிட்டார். எத்தனை படித்தும் அப்பெரியாருடைய அறிவை மறைத்திருந்தது ஆணவம்.

இந்த ஆணவம் உயிர் உடல் கொண்டு நில்லாதபோது அதன் அறிவை விளங்க வொட்டாது தடை செய்யும். உடம்பெடுத்த உயிர் சிலகாலம் வாழ்ந்து இறந்து போனால் மீண்டும் உடல் பெறுகிற காலம்வரை ஆணவ மாகிய அறியாமையில் கட்டுண்டு கிடக்கும். இந்நிலை கேவல நிலை எனப்படும்.[1]

அந்தக்காலத்தில்உயிர்களது வினைகள்மறுபிறவிக்காகப் பக்குவப்படுத்தப்படுகின்றன. பக்குவமாய் விட்டதென்று இறைவன் கருதினால். அவன் உயிர்களுக்கு உடலைக் கூட்டுவான். அப்பொழுது அது மீண்டும் சகல-நிலைக்கு வரும் என்று என் நண்பர்களுக்குக் கேவலநிலை பற்றி விளக்கிக் கூறினேன்.

மேலும் உடலுடன் கூடியிருக்கின்ற காலத்தும் உயிருக்குச் சிலநேரங்களில் அறிவுவிளக்கம் குறைந்தும் முழுவதுமே இல்லாமலும் போவதுண்டு. இந்நிலையும் கேவலநிலை என்றே கூறப்படும்.[2] என்பதையும் அவர்களுக்கு விளக்கிக் கூறினேன்.

---

1. *இது பிறப்பு இறப்புக்களின் பின் உண்டாகும் கேவலம் எனப்படும்.*

2. *இது சகலநிலையில் உண்டாகும் கேவலம் எனப்-படும்.*

## ஆ.1.3. உட்கரணங்களின் உதவி

என் விரிந்த அறிவை ஆணவம் மறைத்து என்னை அறியாமை உடையவனாகச் செய்கிறது என்பதை விளக்கிக் கூறியபின் அப்படியானால் எனக்கு அறிவு தோன்றுவதற்கு உதவிசெய்யும் கருவிகள் உண்டா என்ற கேள்வி எழுந்தது. அதற்கு நான் பின்வருமாறு விடை கூறினேன். எனக்கு அறிவு தோன்றுவதற்கு உதவுவன நெஞ்சு முதலிய நான்கு உட்கரணங்களே. அவை முதல்வனுடைய கருணையினால் எனக்குக் கிடைத்தன. மனிதனுக்குக் கண்ணில் படலம் படர்ந்ததனால் அவன் பெரிய பொருள்கனளயும் காண இயலுவதில்லை. அதற்காக அவன் சிகிச்சை செய்து கொண்டு கண்ணாடியும் போட்டுக் கொள்ள வேண்டியிருக்கிறது. அக்கண்ணாடியின் உதவியினால் பருப்பொருள்களை அவன் காணுகிறான்.

ஆனால் படலம் முழுவதும் நீங்கிய கண்போல காணும் சக்தி முழுவதும் அவனுக்குக் கிடைப்பதில்லை. அது போலவே ஆணவமலம் என்ற நோய் என்னை நீங்கிப் போகும்வரை நான் என் உட்கரணங்களின் உதவியை நாட வேண்டும். அவ்விதம் நாடினால் ஒரு சிறிது அறியும் தன்மை அடைகிறேன் என்று விளக்கங் கூறினேன். நண்பர்கள் அனைவரும் நான் கூறிய விளக்கத்தையும் உதாரணத்தையும் மிகவும் வியப்புடன் கேட்டனர்.

# ஆ. 1 - 4 நான் அறியும் தன்மை எத்தகையது?

எனக்கு நெஞ்சு முதலிய உட்கரணங்கள் உண்டு. மேலும் மெய் முதலிய ஐந்து பொறிகள் உண்டு. இவைகள் எல்லாம் எனக்கு அறியும் தொழிலைச் செய்ய ஓரளவு உதவுகின்றன என்பது பற்றி முந்தின நாள் பேசிக் கொண்டிருந்தோம். மறுநாள் அந்த அறிவு எப்படி நிகழ்கிறது? அறியும் தன்மை எத்தகையது? என ஆராய்ந்தோம்.

ஓர் அரசன் தன் குடிமக்களை ஆளுகிறான். அவன் தானே சென்று தன் மக்களிடம் செய்திகளை அறிய முடியாது. அவனுக்காக அவனுடைய அமைச்சர்கள் அறிந்துகூறுவார்கள் அவ்வமைச்சர்களுக்கு அவனுடைய பரிவாரங்கள் செய்திகளை அறிவிக்கிறார்கள். அது போல உயிராகிய நான் அரசன். நெஞ்சு முதலிய நான்கு உட்கரணங்கள் என் அமைச்சர்கள். மெய் முதலிய ஐந்து பொறிகள் என் பரிவாரங்கள்.

முதலில் பரிவாரங்களாகிய பொறிகள் செய்திகளை அமைச்சர்களுக்குக் கூறுகின்றன. பிறகு அமைச்சர்கள் அரசனாகிய எனக்குக் கூறுகிறார்கள். இவ்வாறு நான் உலகச் செய்திகளை அறிகிறேன். இவ்விரு வகுப்பும் அறிவு தரக்கூடிய கருவிகள். [1]

---

1. *"அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று" என்னும் சிவஞானபோதம் நான்காம் சூத்திரப் பொருள் இங்கு விளக்கப்படுகிறது.*

பரிசனங்கள் இல்லாமல் அமைச்சர்களால் மட்டும் நான் அறியமுடியாது. இருவருடைய ஒத்துழைப்பும் எனக்கு வேண்டும். என் கண் கெட்டுப் போனால் நெஞ்சு முதலியவை இருந்தும் நான் காண முடியாது. அதே போல எந்தப் பொறி கெட்டுப்போனாலும் நெஞ்சு முதலியவை இருந்தும் நான் அறிய முடியாது.

இனி நெஞ்சு முதலிய கரணங்கள் தொழில் செய்யாமல் போனால் மெய், கண், முதலிய பொறிகள் இருந்தும் பயனில்லை.

உதாரணமாக, ஒரு சமயத்தில் எதிரே ஒரு நண்பன் வருவான். என் கண் அவனைப் பார்க்கும். ஆனால் என் நெஞ்சு வேறு இடத்தில் சஞ்சரிக்கும். வெகுநேரம் வரை அவனை அறியாமலே இருந்துவிடுவேன். அதைப் போலவே இனிய பேச்சை என் காது கேட்காத நிலையை என் நெஞ்சு செய்திடும். ஆகவே நான் ஒன்றை அறிய வேண்டுமாயின் என் பொறிகளும், என் உட்கருவிகளும் ஒத்துழைக்க வேண்டும். இவைகளில் நெஞ்சு முதலியவை உட்கருவிகள் என்றும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து பொறிகளும், புறக்கருவிகள் என்றும் சொல்லப்படும்.

## ஆ. 1 - 5. கருவிகள் காரணமாக எனக்கு ஏற்படும் ஐந்து நிலைகள்

எனக்கு அறிவு விளங்கவொட்டாமல் தடுத்து நிற்பது ஆணவமலம். அது நோய் போன்றது. அந்நோய் இருக்கும் மட்டும் எனக்குச் சிறிதளவு அறிவு விளங்கச் செய்வன கருவிகள் என்று விளக்கிக் கூறியபின் அக்கருவிகளால் விளங்கும் அறிவும் ஒரே நிலையில் இல்லாமல் பல்வேறு நிலைகளில் இருக்கும் என்பதையும் விளக்கிக் கூறினேன். கண்ணாடி அணிந்து கொண்டவனுடைய பார்வை அந்தக் கண்ணாடியைப் பொருத்து இருக்கிறது.

சில கண்ணாடிகள் கூட்டிக் காண்பிக்கும்; சில குறைத்துக் காண்பிக்கும்; சில நிற வேறுபாடுகளும் காட்டும். ஆகவே அவைகள் ஒன்றுபோல் வேலை செய்வதில்லை. இவ்விதம் உதவிபுரியும் கருவிகள் 36 உண்டு. அவைகளின் விவரம் இங்கே ஆராய வேண்டாம்.[1] அக்கருவிகள் வேலை செய்வதற்கேற்ப நான் அறியும் நிலைகளும் வேறுபடுகின்றன.

நான் விழித்துக் கொண்டிருக்கையில்[2] வேலை செய்வன சில. கனவு காண்கையில்[3] வேலை செய்வன சில. தூக்கத்தில்[4] வேலை செய்வன சில. அயர்ந்த தூக்கத்தில்[5] வேலை செய்வன சில. கடுந்தூக்கத்தில்[6] வேலை செய்வது ஒன்று. இத்தன்மையாக ஐந்து நிலைகள் எனக்கு உண்டு. இந்த ஐந்து நிலைகள் நான் வேலை செய்வதற்குத் துணை செய்யும் உட்கருவிகளும் புறக்கருவிகளும் காரணமாக எனக்கு உண்டாகின்றன.

---

1. *இங்கு ஆசிரியர் தத்துவங்கள் முப்பத்தாறனையும் கூறுகிறார் எனத்தெரிகிறது. அவையாவன சிவம்,*

சக்தி, சதாசிவம், மயேச்சுரம், சுத்தவித்தை என்னும் சுத்த தத்துவங்கள் ஐந்து; காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்னும் வித்யா தத்துவம் ஏழு; மண், நீர், நெருப்பு, காற்று ஆகாயம் என்னும் பூதம் ஐந்து; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன்மாத்திரை ஐந்து; மெய், வாய், கண், மூக்கு செவி என்னும் ஞானேந்திரியம் ஐந்து; வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் கன்மேந்த்ரியம் ஐந்து; மனம், புத்தி அகங் காரம், சித்தம் என்னும் அந்தக்கரணம் நான்கு ஆக ஆன்மதத்துவம் இருபத்து நான்கு. இவற்றின் விரிவும் விளக்கமும் உண்மை விளக்கம் போன்ற நூல்களில் காண்க.

இம்முப்பத்தாறு தத்துவங்களுடன் தாத்துவிகங்கள் அறுபதனையும் உணர்ந்தால்தான் அவத்தைகளில் தொழிற்படும் கருவிகளை உணர முடியும்

தாத்துவிகம் அறுபதாவன. பிருதிவியின் கூறாகிய எலும்பு, தசை மயிர், தோல், நரம்பு என்னும் ஐந்து; அப்புவின் கூறாகிய மூத்திரம், இரத்தம், சிலேத்துமம், வியர்வை, சுக்கில சோணிதங்கள் என்னும் ஐந்து;

தேயுவின் கூறாகிய இருதயச்சூடு, சிரணச்சூடு, நயனச்சூடு, தேகச்சூடு, பயித்தியச்சூடு என்னும் ஐந்து; வாயுவின் கூறாகிய பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன் கிரிகசுரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் பத்து; ஆகாயத்தின் கூறாகிய அத்தி, அலம்புடை இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகுதை, சங்கினி, சிருவை, புருடன் என்னும் நாடிகள் பத்து;

ஞானேந்திரிய விடயங்களாகிய சத்தம் பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்து; கன்மேந்திரிய விடயங்களாகிய வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் ஐந்து; ஆங்காரத்தின் கூறாகிய தைசதம், வைகாரிகம், பூதாதி என்னும் மூன்று; குற்றங்களாகிய காமம், குரோதம், லோபம், மோகம், மதம் என்னும் ஐந்து; குணங்களாகிய சாத்துவிகம் ராஜசம், தாமசம் என்னும் மூன்று; வாக்குகளாகிய சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நான்கு-ஆக அறுபது.

2. இந்நிலை சாக்கிரம் எனப்படும். இதில் தொழிற்படும் கருவிகள் முப்பத்தைந்து. அவை: ஞானேந்திரியம் 5; கன்மேந்திரியம் 5; ஞானேந்திரிய விடயம் 5; கன்மேந்திரிய விடயம் 5; வாயுக்கள் 10; அந்தக்கரணம் 4; புருடன் 1; இந்த அவத்தையில் ஆன்மா புருவ நடுவில் நின்று தொழிற்படும்.

3 இந்நிலை சொப்பனம் எனப்படும். இதில் தொழிற்படும் கருவிகள் இருபத்தைந்து அவை : ஞானந்திரிய விடயம் 5; கன்மேந்திரிய விடயம் 5; வாயுக்கள் 10; அந்தக்கரணம் 4; புருடன் 1 இந்த அவத்தையில் ஆன்மா கண்டம் என்னும் இடத்தில நிற்கும்.

4. இந்நிலை சுழுத்தி எனப்படும். இதில் தொழிற்படும் கருவிகள் மூன்று. அவை : சித்தம் என்னும் அந்தக்கரணம் 1 பிராணன் என்னும் வாயு 1. புருடன் 1. இந்த அவத்தையில் ஆன்மா இதயம் என்னுமிடத்தில் நிற்கும்.

5. இந்நிலை துரியம் எனப்படும். இதில் தொழிற்படும் கருவிகள் இரண்டு. அவை. பிராணன் என்னும்

வாயு 1. புருடன் 1. இந்த அவத்தையில் ஆன்மாநாடி என்னும் இடத்தில் நிற்கும்.

6. இந்நிலை துரியாதீதம் எனப்படும். இதில் புருடன் என்னும் ஒன்று மட்டுமே தொழிற்படுவது இந்த அவத்தையில் ஆன்மா மூலாதாரம் என்னுமிடத்தில் கிடக்கும். இதன் விளக்கம் ஞானாமிர்தம் ''கால் கொடுத்து இருகை முட்டி'' (செய் - 16) என்னும் அகவலான் உணர்க.

7. இங்கு ''அமைச்சரசு ஏய்ப்ப நின்று அஞ்சவத்-தைத்தே'' என்னும் சிவஞான போதம் நான்காம் சூத்திரத்து மூன்றாம் அதிகரணப் பொருளாகிய ''இனி இவ்வான்மாச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்தி-தனாய் நிற்கும் என்றது'' என்னும் செய்தி விளக்கப் பட்டது இந்த அவத்தைகளில் தொழிற்படும் கருவி-களின் தொகை ஆன்மா நிற்கும் இடம் ஆகியன பற்றிய விளக்கத்தை

சாக்கிரம் முப்பத்தைந்து நுதலினில் கனவுதன்னில்
ஆக்கிய இருபத் தைந்து களத்தினில் சுழுனை மூன்று
நீக்கிய இதயந் தன்னில் துரியத்தில் இரண்டு நாபி
நோக்கிய துரியா தீதம் நுவலின்மூ லத்தின் ஒன்றே

என்னும் சிவஞானசித்தியார் சுபக்கம் 223 ஆம் செய்யுளான் அறிக.

இதனால் அவத்தைப்பட்டு அறிவது ஆன்மாவின் இலக்கணம் என்பது உணர்த்தப்பட்டது ●

# ஆ. 1 - 6 என் தன்மை

இதுவரை நானும் என்னைப் போன்ற உயிர்களும் எத்தன்மையோம்; எவ்வாறு அறிவுறுகின்றோம் என்று ஆராய்ந்தோம்.

உடல் முதலியவைகள் அல்லாத நான் நெஞ்சு முதலிய உட்கருவிகளிலிருந்து வேறானவன். உடல் முதலியவை நீங்கியபிறகு தனியாக நான் இருக்கும்போது என்னை மலம் பிடித்துக்கொண்டு மயக்குகிறது. அதன் கொடுமை நீங்குவதற்கு முதல்வன் உடலையும் உட்கருவிகளையும், புறக்கருவிகளையும் கொடுத்து இருக்கிறான். எனக்கு அமைச்சர்போல் உட்கருவிகளும் பரிசனங்களைப் போலப் புறக்கருவிகளும் உதவுகின்றன.

அவ்விதம் அவை உதவி புரியும்போது அக்கருவிகள் வெவ்வேறு விதமாக உதவி செய்ய நான் ஐந்து நிலைகளை அடைகிறேன். இவ்விதம் உதவி பெற்று முன்னர் மறைந்து கிடக்கும் அறிவு விளக்கத்தை ஒரு சிறிது பெறுவேன். இதுதான் சிற்றறிவினனாகிய நான் இருக்கும் தன்மை என்று என்னுடைய நண்பர்களுக்கு விளக்கிக் கூறினேன். ●

# ஆ - 2. உள்ளவற்றை அறியவொட்டாமல் என்னைக் கட்டுப் படுத்தி இருக்கின்ற தளைகளின் குணங்கள் யாவை?

## ஆ. 2 - 1. தளைகள் பற்றிய விவரம் :

என்னைக் கட்டுபடுத்தியிருக்கும் தளைகள் மூன்று என்று இதுவரை நாங்கள் அறிந்தோம். ஒன்று; ஆணவம் என்னும் மலம். இது என் விரிந்த தன்மையைக் குறுக்கி என்னை அணுவாகச் செய்கிறது. இரண்டு; கன்மம் அல்லது வினை. : இது மூன்று வகைகளில்[1] என்னைக் கட்டிக் கொண்டிருக்கிறது, மூன்றாவது மாயை. இது என் உடல், கருவிகள், உலகம், உலகத்தில் உள்ள அனுபவப்பொருள்கள் ஆகியவை தோன்றுவதற்கு முதற்காரணமாக இருப்பது. தளைகள் உண்டு என்று முன்பே கூறியபோது இவைகளின் குணங்களையும் ஒருவாறு அறிந்திருந்தோம். இவைகளிலே சிறப்பாகச் சிலவற்றை மேலும் ஆராயத் தொடங்கினோம்.

தளைகளை மூன்று பிரிவுகளாகக் கொள்வதன்றி ஆணவம், கன்மம், மாயை என்பவைகளோடு மாயேயம் திரோதானம் என்ற இரண்டையும் சேர்த்து ஐந்தாகக் கொள்வதும் உண்டு. மாயேயம் என்பது மாயையின் காரியம். திரோதானம் என்பது மறைத்தலைச் செய்யும்

---

1. *சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம்*

சக்தி[2]. இந்தச் சக்தி சிவத்தின் சித் சக்தி என்று சொல்லப்படும்.

இது இறைவன் ஆணையால் கன்மம், மாயை இரண்டையும் தொழிற்படுத்திக் கொண்டிருக்கும். இங்ஙனம் மறைப்புச் செய்வதால் இச்சக்தியும் உபசாரத்தால் தளை அல்லது பாசம் என்று சொல்லப்படும்.

---

2. மும்மல நெல்லி னுக்கு முளையொடு தவிடு
உமிப்போல
மம்மர்செய்து அணுவின் உண்மை வடிவினை
மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போக பந்த போத்திருத்
துவங்கள் பண்ணும்
இம்மலம் மூன்றி னோடும் இருமலம் இசைப்பன்
இன்னும்

மாயையின் காரி யத்தை மாயேய மலம தென்றும்
ஏயுமும் மலங்கள் தத்தந் தொழிலினை இயற்ற ஏவுந்
தூயவன் தனதோர்சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வர்இம் மலங்கள் ஐந்தும் அணுக்களை
அணைந்து நிற்கும்

என்னும் சிவஞான சித்தியார் சுபக்கம் 175,176 ஆம் செய்யுள்களின் செய்தி இங்கு விளக்கப்பட்டுள்ளது.

# ஆ. 2 - 2 கருவிகள் அறியும் விதம் எத்தன்மையது?

மறுநாள் நாங்கள் மாயேயமாகிய கருவிகள் எந்த அளவுக்கு அறியும் என ஆராய்ந்தோம்.

என் உடலில் உள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற கருவிகளுக்கு இயற்கையில் அறிவு இல்லை. அவை உயிர் இல்லாப்பொருள்கள். அரசனுக்கு அமைச் சர்கள் உலகச் செய்திகளைச் சொல்லுவார்கள். அது போல அறிவாகிய எனக்கு என் கருவிகள் அமைச்சர் போல செய்திகளைக் கூறுவன. அதுவும் நான் உடலிலே இருக்கும் போது தான் அவைகளுக்கு இச்செய்திகளைத் தெரியப்படுத்தும் ஆற்றல் உண்டு.

நான் உடலை விட்டுப் போய்விட்டால் இக்கருவிகளுக்கு யாதொரு ஆற்றலும் இல்லை. அரசனுடைய ஆணை இருக்கும் மட்டும் ஏவலாளர் வேலை செய்வர். அரசனுக்கும் உதவுவர். ஆணை முடிவு பெற்றால் அவர்-களால் எதுவும் செய்ய இயலாது. அது போலவே கருவி -களும் என் ஆணையைப் பொருத்தே வேலை செய்யும்.

ஆகவே கருவிகள் ஒரு அளவில்தான் தொழில் செய்யும். அதுவும் யான் உணர்த்தத்தான் அவையும் அறியும்.

ஒரு அரசன் தன் ஏவலாளர் ஒவ்வொருவருக்கும் அதிகாரம் தருவான். அதற்கு ஒரு வரம்பும் விதிப்பான். அவர்களும் அவ்வரம்புக்குட்பட்டே வேலை செய்வார்கள். அவர்கள் அரசனுடைய வேலையைச் செய்வதனாலே அரசனுக்கு அவ்வேலையாட்களால் உதவியும் கிடைக்கும். அவ்வேலையும் உதவியும்

அரசனுடைய அதிகாரம் வேலையாளர்பால் இருக்கும் வரையில் நடக்கும். கொடுத்தவரம்பிற்கு மீறியும் நடவாது.

இதுபோல் நான் என் கருவிகளுக்குக் கொடுத்த உத்தரவும் வரம்பிற்கு உட்பட்டது. எனக்கே குறைவுகள் இருக்கும்போது அவைகளுக்குட்பட்டே கருவிகளின் தொழிலும் இருக்கும். அப்படியாயின் கருவிகள் என்னை அறிவதெப்படி. கருவிகள் அளவு அறிந்து வேலை செய்யும். அதே சமயத்தில் அவைகள் என்னையும் அறியமாட்டா[1] என்று முடிவு செய்தோம்.

---

1. "விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு அளந்தறிந் தறியா" என்னும் சிவஞானபோதம் ஐந்தாம் சூத்திரத்தின் முற்பகுதியிற் கூறப்படும் செய்தி இங்கு விளக்கப்பட்டது. இதன் விளக்கத்தை

   "ஐம்பொறியை ஆண்டங்கரசாய் உளம்நிற்ப
   ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்"
   ( சிவ - போதம் - சூத் - 5 - அதி - 1 )

   என்னும் சிவஞானபோத வெண்பாவாலும் "பொறிபுலன் கரணமெல்லாம் புருடனாலறிந்து ஆன்மாவை அறிதரா" என்னும் சிவஞான சித்தியார் சுபக்கம் 231 ஆம் செய்யுளானும் உணரலாம்.

# ஆ. 2-3. நான் அறிவதற்குக் கருவிகளின் துணைமட்டும் போதுமா?

## அறியும் வகைகள் எவை?

எனக்கு அறிவு விளங்குவதற்கு இறைவன் உட்கருவி, புறக்கருவிகளைத் தருவதோடு நின்று விடுகிறானா? வேறு ஏதேனும் உதவி செய்கிறானா என்பதுபற்றி மறுநாள் கூடிப்பேசினோம். கண் பார்க்கக் கூடிய சக்தி பெற்றுள்ளது. இருந்தாலும் ஞாயிற்றின் ஒளி இருந்தால் தான் அது காணும். ஞாயிற்றின் ஒளி இல்லாவிட்டால் இருள் ஏற்படும். அவ்விருட்டில் கண் காண இயலாது. அதுபோல நானோ அறிவுள்ளவன். என்னுடைய அறிவு வரம்புள்ளது. வேறோர் அறிவுப்-பொருள் அறிவித்தால்தான் நான் அறிவேன். அந்த அறிவுப்பொருளே முதல்வன்.

நான் கண் போன்றவன். முதல்வன் ஞாயிறு போன்றவன். ஞாயிற்றின் முன்னிலையில் கண் தெரிந்து கொள்ளுதல் போல் முதல்வன் முன்னிலையில் நான் அவன் அறிவிக்க அறியும் ஆற்றலைப்பெறுவேன். அம் முதல்வன் எனக்கு அறிவுறுத்தும் பொருட்டு, அவன் அருட்சத்திக்கு ஆணை இடுவன். அவ்வாணையால் இயங்கும் அருட்சக்தியே என்னை அறியச் செய்கிறது. ஆணவ மலம் நீங்கும் வரையில் இந்த நிலைதான் எனக்கு உண்டு என முடிவு செய்தோம்.

இனி என் அறிவு ஒருவரம்பிற்கு உட்பட்டது. முதல்வனுடைய அறிவோ வரம்பு அற்றது. வரம்பு அற்ற பொருளை வரம்புள்ள பொருள் அறிய முடியுமா?

முடியாது. ஆகவே முதல்வனால் அவன் ஆணையின்படி அவன் சத்தி உதவி புரிய அதனால் அறியும் ஆற்றல் பெற்ற என்னால் அளவு மீறிய முதல்வனை அறிய முடியாது என்க .. இனிக்காந்தத்திற்கு எதிரே செல்லும் இரும்பு அசையும். இரும்பு மாறுவது. காந்தமோ மாறாதது. ஆனால் இரும்பை அசையச் செய்யும். அதுபோல முதல்வன் சன்னதியில் நான் தொழில்புரிவேன். ஆனால் முதல்வனோ அதனால் அசையமாட்டான். எவ்வித மாறுதலும் அடைய-மாட்டான்.[1] எனவும் அவர்களுக்கு விளக்கிக் கூறினேன்.

---

1. *சிவஞானபோதம் - ஐந்தாம் சூத்திரம் கூறும் "தாம்தம் உணர்வின் தமியளருள் காந்தங்கண்ட பசாசத்து அவையே" என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

   *இதன் விளக்கத்தை "ஆன்மாக்கள் அனைத்தும் எங்கும் செறிதரும் சிவன்தனாலே அறிந்திடும் சிவனைக்காணா அறிதரும் சிவனே எல்லாம் அறிந்து அறிவித்து நிற்பன்" என்னும் சிவஞான-சித்தியார் சுபக்கம் 231 ஆம் செய்யுளால் அறியலாம்.*

   *இதனால் பாசங்கள் அறிவற்றவை; அவை அறிவுடைய உயிராலும் இறைவனுடைய சத்தி-யாலும் தொழிற்படுத்தப்பட்டு அறிவுடைய பொருள் போல் விளங்கும் என்று பாசத்தின் இலக்கணம் கூறப்பட்டது.*

   *உயிர்களின் பொருட்டு உடனாயிருந்து அறிந்து அறிவித்து நிற்பது முதல்வன் இலக்கணம் என்பதும் இங்கு உணர்த்தப்பட்டது*

## ஆ. 2 - 4 கட்டுகளின் பண்புகள்

இதுவரை ஆராய்ந்தவைகளை எடுத்துக் கூறுவோம். என்னைக் கட்டுப்படுத்தும் தளைகளில் முன்னமே சொல்லி இருப்பது போக எஞ்சி நிற்பவை மாயா-காரியங்களாகிய கருவிகளும், சிவசத்தியாகிய திரோதானமுமே. கருவிகள் என்னுடைய அதிகாரத்-தினால் வேலை செய்கின்றன. அதன் வரம்பிற்கு உட்பட்டே அவை வேலை செய்யும். அவைகள் என்னை அறியா. கருவிகளின் வழியே சென்று வினைப்பயனை அனுபவிப்பதற்காக எனக்கு உண்மை தெரிய ஒட்டாமல் மறைப்பது திரோதானம்.

இந்த மறைப்பு இல்லாவிட்டால் எனக்கு வினைப்-பயனை அனுபவிப்பதில் ஊக்கம் நிகழாது. வினைப்-பயனை அனுபவித்துக் கழிந்தபின் இந்தத் திரோதான சத்தியே அருட்சத்தியாக மாறி எனக்கு உண்மைப் பொருளை உணரும்படியாக அறிவு விளக்கத்தைச் செய்து சிவத்துடன் சேரும் வழியைக் காட்டும். இவையே சைவசித்தாந்தத்தில் கூறப்படும் கட்டுக்களின் இயல்புகள். ●

# ஆ. 3. முதல்வனுடைய குணங்கள் யாவை?

## ஆ. 3–1. முதல்வன் நம்மால் அறியப்படுபவனா?

சிலநாட்களுக்குமுன் இறைவன் ஒருவன் உண்டு என்று முடிவு செய்த நாங்கள் அதன் பின்னர் உயிர்களைப் பற்றியும் தளைகளைப்பற்றியும் சில நாட்கள் பேசிக்கொண்டிருந்தோம். மீண்டும் இறைவனுடைய குணங்களைப்பற்றி ஆராயத் தொடங்கினோம். என் நண்பர்களிடம் நான் பின்வருமாறு கூறினேன்.

நீலகிரி மலை ஏறிச் சென்று ஒத்தைக்கல் மந்தை தாண்டிப் பன்னிரண்டு கல் சென்றால் மலைத்தொடர்களுக்கு இடையே ஒரு பள்ளத்தாக்கு வளைந்து வளைந்து செல்கிறதைக் காணலாம். அப்பள்ளத் தாக்கில் ஒருசிறு ஆறு ஓடுகிறது. மழைக்காலத்தில் சற்று மிகுதியாக நீர் ஓடும். ஆனால் கோடைக்காலத்தில் ஒருசிறு ஒடைபோலத்தான் ஓடும். இந்த ஆறு சிறிது தூரம் சென்று சில பாறைகளின் மீது பாய்ந்து ஓர் ஆழமான பள்ளத்தாக்கில் விழுகிறது. இவ்விதம் பாய்வதனால் இதனை அங்கு வாழும் பழங்குடி மக்கள் ' பாய்கரை ' என்று பெயரிட்டழைத்தார்கள்.

இப்பாய்கரையைப் பார்ப்பவர்கள் இச்சிற்றருவியினால் யாருக்கு என்ன பயன் என்று எண்ணுவார்கள். மழைக் காலத்தில் வெள்ளம் வந்தாலும் அவ்வெள்ளம் ஓடிச்-சென்று மாயாற்றில் விழுந்து இறுதியில் பவானியிலும் பிறகு அதன் மூலம் காவேரியிலும் சென்று விழும்.

பவானிக்குச் செல்லும் வரையும் இதன் நீரினால் யாருக்கும் ஒரு பயனும் இல்லை. ஆனால் ஒரு மின்சார ஆராய்ச்சியாளர் பார்த்தார். இதிலிருந்து நாடு நன்மை பெறக்கூடும் என்று எண்ணினார். பாய்கரை வழியாகச் சிதறி ஓடும் நீர்த் தொகுதிகளை எல்லாம் ஓர் அணைபோட்டுத் தேக்கினார்.

மழைக்காலத்தில் வரும் வெள்ளத்தையும் தடுத்தார். ஒரு பெரிய ஏரி ஆயிற்று. அதனால் நிரந்தரமான நீர் நிலை ஒன்று ஏற்பட்டது. அது மிகவும் உயர்ந்த இடத்தில் இருந்தது. அடுத்தாற்போல் 3000 அடி ஆழத்தில் பள்ளத்தாக்கு இருந்தது. அங்கே செங்குத்-தான பாறை வழியாகக் குழாய் நிறுத்தி அதன் வழியாக இந்த நீரை விட்டார்.

அந்நீர் வெகுவேகமாக அப்பள்ளத்தாக்கில் விழுந்தது. அங்கே பெரிய சக்கரங்களை வைத்து அவைகளின் மீது அவ்விசை நீரை விழச்செய்ததனால் அதிக சக்தி வாய்ந்த மின்சாரம் அங்கே உற்பத்தி ஆயிற்று. அச்சக்தியைக் கம்பிகளின் வழியாகக் கொண்டு சென்று 200, 300 கற்களுக்கு அப்பால் உள்ள ஊர்களில் விளக்கு எரிப்பதற்கும் எந்திரசாலை நடத்துவதற்கும் பஞ்சு நூற்பதற்கும் துணிநெய்வதற்கும் உபயோகப் படுத்து-கிறார்கள்.

பாய்கரையில் உள்ள சிறிய அருவியில் மின்சாரம் இருப்பது நமக்குத் தோன்றுகிறதா? நமது வீட்டில் விளக்கெரிக்கும் போதல்லவோ மின்சாரம் இருப்பதாகத் தோன்றுகிறது! நூலாலையில் நுழைந்தால் அல்லவோ மின்சாரத்தின் ஆற்றல் வெளியாகிறது!

பாய்கரையில் உள்ள மின்சாரம் நமக்குத் தெரியா-விட்டாலும் அதனை ஓர் அறிஞன் உணர்ந்திருந்தான். ஆனால் விளக்கெரியும் போது அறிவில்லாத நாமும் அந்த மின்சாரத்தை உணர்கிறோம். இந்த நிலைமையை நண்பர்களுக்கு எடுத்துக்கூறி[1] இறைவனும் இதைப் போலவே ஒரு முறையில் அறியப்படாதவனாக இருக்-கிறான்; மற்றொரு முறையில் அறியத்தக்கவனாகவும் இருக்கிறான்: உயிர் அறிவாலும், தளையறிவாலும் அறியப்படாதவனாகவும் அவனோடு இருந்து - அவன் கருணையினாலே - இறை அறிவினால் அறியப்படத்-தக்கவனாகவும் இருக்கிறான்[2] என்பதை விளக்கினேன்.

---

1. *இந்த உவமையில் மின் ஆற்றல் ஒருவாற்றான் அறியப்படுகிறது; ஒருவாற்றான் அறியப்படாததாக இருக்கிறது என்ற அளவு மட்டும் கொள்ளுதல் வேண்டும்.*

2. *சிவஞானபோதம் ஆறாஞ்சூத்திரப் பொருள் இங்கு விளக்கப் பட்டுள்ளது. ''சிவசத்தாமென இரண்டு வகையின் இசைக்குமன் உலகே'' என்பது சூத்திரம்''. முதற்பொருள்......... ஒருவாற்றான் அறியப்படாமையும் ஒருவாற்றான் அறியப்படு-தலுமாகிய இரண்டு வகையானும் சிவசத்தாமெனக் கூறுவர்'' ''ஒருவாற்றான் அறியப்படாமை பாச-ஞான பசுஞானங்களான் அறியப்படாமை; ஒரு-வாற்றான் அறியப்படுதல் சிவஞானமொன்றானே அறியப்படுதல்'' என்பன சிவஞான முனிவரின் உரையும் விளக்கமும் (சிவஞானபோதம் சூ 6. சிற்றுரை).*

## ஆ. 3-2 முதல்வன் அறியப்-படுபவன் என்று சொல்லலாமா?

மறுநாளும் நாங்கள் ஒன்றுகூடி முதல்வனுடைய இலக்கணம் யாதாக இருக்கும் என்று பேசத் தொடங்கினோம். நான் அவர்களுக்கு உள்ள பொருள், இல்லாத பொருள் ஆகியவற்றின் இயல்பினைப் பின்வருமாறு விளக்கினேன்.

பொருள்கள் உயிருள்ளவை, உயிரில்லாதவை என்று இருவகைப்படும். உயிருள்ள பொருள்கள் அறிவுடைய பொருள்களாகவும் இருக்கும். ஆகவே உயிருள்ள பொருள் சித்துப் பொருள் எனப்படும். சித்துப் பொருளெல்லாம் சத்துப் பொருளாகவும் இருக்கும். சத்துப்பொருள் என்றால் உள்ள பொருள் என்று கூறப்படும். என்றும் மாறுதலின்றி ஒரே நிலையில் உள்ள பொருள்களைத்தான் உள்ள பொருள்-சத்துப்பொருள்-என்று சொல்லலாம். இத்தகைய பொருள் உயிர்களினுடைய அறிவினால் உணரப்படாததாக இருக்கும்.

உயிரில்லாத பொருள்கள் அறிவில்லாத பொருள்களாகவும் இருக்கும். ஆகவே உயிரில்லாத பொருள்-அசித்துப் பொருள் எனப்படும். அசித்துப் பொருள் எல்லாம் அசத்துப் பொருளாகவும் இருக்கும். அசத்துப்-பொருள் என்றால் சத்துப் பொருளுக்கு நேர்எதிர்-மறையான பொருள் என்பது கருத்து. சத்துப்பொருளை உள்ள பொருள் என்றால் அசத்துப் பொருளை இல்லாத பொருள் என்று தானே சொல்ல வேண்டும். ஆனால் அப்படிச் சொல்லுவதில்லை.

சத்துப் பொருள் என்பது என்றும் மாறுதலின்றி-ஒரே-நிலையில்-உள்ள பொருள் என்று விளக்கம் சொன்னோம் அல்லவா? அதற்கு எதிர் மறையாக அசத்துப் பொருள் என்பது அடிக்கடி மாறிக்கொண்டே இருக்கின்ற-ஒரு

நிலையிலே நில்லாத-பொருள் என்று விளக்கம் சொல்ல வேண்டும்.

பிரபஞ்சத்தில் உள்ள பொருளெல்லாம் இங்ஙனம் மாறிக்கொண்டே இருக்கக் கூடிய பொருள்களே. அதாவது அசத்துப் பொருள்களே. இந்த அசத்துப் பொருள்களே உயிர் அறிவினால் சுட்டி அறியத்தக்க பொருளாகும்.

அசத்துப்பொருள் சுட்டியறியப்படுவது எனவே சுட்டி அறியப்படுவனவெல்லாம் அசத்துப் பொருள் என்பது விளங்குகிறதல்லவா?[1]

இப்பொழுது இறைவன் உயிர்களாகிய நம்மால் சுட்டி-அறியப் படுபவன் என்று சொன்னால் அவன் இந்தப் பிரஞ்சத்தில் உள்ள மற்றைய பொருள்களைப் போல அசத்துப் பொருள் என்ற வகையைச் சேர்ந்தவன் என்று கொள்ள வேண்டிவரும். இறைவனோ தூய-முழு-அறிவே வடிவமாக இருப்பவனல்லவா? அவனை எப்படி அசத்து - அசித்து என்று சொல்ல முடியும்? முடியாது. ஆகவே முதல்வன் அறியப்படுபவன் என்று சொல்வது பொருந்தாது என்றேன்.

அவர்களும் ஆம் ஆம் என்று ஒப்புக் கொண்டார்கள். என்றாலும் வேறு எப்படிச் சொல்வது? என்பது புரியாமல் விழித்தார்கள். இன்று இந்த அளவில் நிறுத்திக் கொள்வோம். நாளைக்கு மீண்டும் பேசுவோம் என முடிவு செய்துகொண்டு அவரவர்கள் வீட்டுக்குப் போனார்கள்.

---

1. *சிவஞானபோதம் - ஆறாஞ் சூத்திரம் - முதல் அதிகரணம். ''சுண்டு அறிவினாலறியப்பட்ட சுட்டு அசத்து என்றது'' என்பது இங்கு விளக்கப்பட்டது.*

## ஆ 3-3. முதல்வன் அறியப்படாதவன் என்று சொல்லலாமா?

மறுநாள் நண்பர்கள் வழக்கம் போல் வந்து கூடினார்கள். நானே நேற்று விட்ட இடத்திலிருந்து பேச்சைத் தொடங்கினேன்.

முதல்வன் அறியப்படுபவன் என்று சொன்னால் உலகத்துப் பொருள்போல் அசத்துப் பொருளாய் விடுவானே என்று பயந்து கொண்டு அறியப்படாதவன் என்று சொல்லி விடலாமா என்றால் அதிலும் ஒரு சிக்கல் இருக்கிறது. பொருள் என்று ஒன்று இருக்கின்றது என்று சொன்னால் அது யாராலாவது அறியப்படுவதாக இருக்க வேண்டும். அறியப்படாத பொருள் ஒன்று இருக்கிறது என்று சொன்னால் அதனால் யாருக்கு என்னலாபம்? அறியப்படாதது என்றால் அது எக்காலத்தும் இல்லாத பொருளாகத்தான் இருக்கும். அத்தகைய பொருளைத்தான் அறியப்படாத பொருள் என்று சொல்லுதல் வேண்டும்.[1]

எனவே முதல்வன் அறியப்படாதவன் என்றால் அவன் இல்லாத பொருளாக ஆய்விடுவான். எங்கும் நிறைந்து உள்ள முதல்வனை இல்லாத பொருள் என்று சொல்லலாமா? அங்ஙனம் சொல்லுதலும் பொருந்தாதே! என்றேன்.

கேட்ட நண்பர்கள் அறியப்படுபவன் என்று சொன்னாலும் தப்பு என்கிறாய்; அறியப்படாதவன் என்று சொன்னாலும் தப்பு என்கிறாய்; வேறு எப்படித்தான் சொல்வது? என்று சற்று வருத்தத்துடன் கேட்டார்கள்.

நானே அவர்களுக்குத் தொடர்ந்து விளக்கம் சொல்லத் தொடங்கினேன்.

---

1. *சிவஞானபோதம் - ஆறாஞ்சூத்திரம் - 'உணராதின்மையின்' என்பதன் பொருள் இங்கு விளக்கப்பட்டது.*

# ஆ. 3-4. முதல்வன் அறியப்படாதவனாகவும் அறியப்படுபவனாகவும் உள்ளான்.

முதல்வன் அறியப்படுபவன் என்றோ அறியப்படாதவன் என்றோ ஒருபக்கத்தில் சார்த்திச் சொல்லக்கூடாது. இரண்டு தன்மையும் அவனுக்கு உண்டு. ஆகவே முதல்வன் ஒருவகையால் அறியப்படாதவன். மற்றொரு வகையால் அறியப்படுபவன் என்று சொல்லுதல் வேண்டும். பாய்கரை நீரில் உள்ள மின்சாரம் நமது கண்ணிற்குத் தெரிவதில்லை. அது வெறும் ஆற்று நீராகவே ஓடிக்கொண்டிருந்தால் அதிலுள்ள மின்சாரம் அறியப்படாததுதான்.

ஆனால் அது தேக்கப்பட்டு, குழாய்வழியாக இறக்கப் பெற்று, சக்கரத்தின் பேரில் விழச்செய்து, கம்பிகளால் போக்கப் பெற்று, ஒருகண்ணாடிக் குப்பியில் சிறு கரிக்கம்பிகளின் வழியாகச் செலுத்தப் பெற்றால் நமக்கு ஒளியாகத் தெரிகிறது. அப்போது அச்சத்தி பாய்கரை நீரில் உள்ளதென அறிவோம். ஆகவே மின்சாரம் எப்படி அறியப்படாததாகவும், அறியப்படுவதாகவும் தோன்றுகிறதோ அதைப் போலவே முதல்வன் நம்மால் ஒருமுறையில் அறியப்படாதவனாகவும் மற்றொரு முறையில் அறியப்படுபவனாகவும். இரண்டுவகையான பண்புகளைக் கொண்டுள்ளான் என்று கூறுதல் வேண்டும்.

ஒரு முறையில் அறியப்படாதவன் என்றது உயிர்கள் தமது சிற்றறிவினாலும் உயிர்களுக்குத் துணையாய் இருக்கின்ற கண் முதலிய புறக்கருவிகள் மனம் முதலிய

அகக் கருவிகள் ஆகியவற்றின் துணையினாலும் அறியப்-படாதவன் என்னும் தன்மையை உணர்த்தும். மற்றொரு முறையில் அறியப்படுபவன் என்றது உயிரறிவு, கருவிகளின் துணையால் பெறும் அறிவு ஆகிய இரண்டையும் கடந்து நின்ற திருவருளறிவினால் அறியப்படுபவன் என்னும் தன்மையை உணர்த்தும் என்றேன்.[1] நண்பர்களுக்கு வருத்தம் ஒருவாறு தீர்ந்து வியப்பு உண்டாயிற்று.

1. *சிவஞானபோதம் - ஆறாஞ்சூத்திரம் - இரண்டாம் அதிகரணம். ''இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற் பாற்று'' என்பதன் விளக்கம் இங்கு எழுதப்பட்டது.*

# ஆ. 3-5. முதல்வனைப் பற்றி அறிந்தவை.

இதுவரை ஆராய்ந்தவை முதல்வனுடைய இயல்புகள். அவற்றைப் பின் வருமாறு தொகுத்துக் கூறலாம்.

முதல்வனுடைய இயல்பை விளக்குவதற்குப் பாய்கரை ஆற்றிலிருந்து விளைவித்த மின்சாரத்தை உவமையாகக் கூறினோம். நீரில் மின்சாரத்தை அறிவதில்லை. விளக்கில் ஏற்றின பிறகு அதனை அறிகிறோம். முதல்வன் சிற்றறிவுள்ள நம்மால் அறியப்படாதவன், அவனை அறியும் ஆற்றலும் அவனுடைய அருளும் இருந்தால் நாம் அவனை அறியக்கூடும். ஆகவே அறியப் படாதவனாக இருந்தாலும் அவன் அறியப்படுபவன் ஆகிறான்.

இந்த இரண்டு குணங்களும் அவனுக்கு இருப்பதால் அவன் சிவசத்து அல்லது சித்துச்சத்து எனப்படுவான். எனவே சத்துப் பொருள் இருவகை என்பதனையும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். தளைகளும் சத்துப்-பொருள்களே. அவை சடசத்து அல்லது அசித்துச் சத்து அதாவது அறிவில்லாத உள்பொருள் என உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். சிவசத்து என்பது உயிர் அறிவிற்கும் அப்பாற்பட்ட தூய அறிவே வடிவாகிய உள்பொருள் என உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். [1]

---

*1. தொடக்கம் முதல் இதுவரை சிவஞான போதத்தில் பொது அதிகாரத்தில் உள்ள பிரமாண இயல், இலக்கண இயல் ஆகியவற்றில் அடங்கிய ஆறு சூத்திரங்களின் கருத்தும் முறையாக விளக்கப்-பட்டுள்ளன.*

# இ. அறியும் விதங்கள் யார்? எவரால்? எப்படி?

## இ. 1. யார் எதனை அறிவர்?

### இ. 1-1. முன்னுரை விளக்கம்.

முதல்வன் உளன். அவனைக் காணாதபடி என்னைத் தடுத்து நிற்கும் தளை ஒன்று உண்டு. நான் உளேன். என்று உள்ள பொருள்கள் மூன்று எனச் சிறுவர்களாகிய நாங்கள் முன்னம் அறிந்தோம். பிறகு இம்முப்பொருள்-களின் குணங்களைப் பற்றியும் ஆராய்ந்தோம்.

இனி இம்முப்பொருள்களும் அப்படி அப்படியே தனித்-தனியே இருக்குமா? ஒன்றினை ஒன்று அறியுமா? ஒன்றனால் ஒன்று பயன் கொள்ளுமா? என்று ஆராயத் தொடங்கினோம். இந்த ஆராய்ச்சியில் எந்தப் பொருள் எந்தப் பொருளை அறியும்? அங்ஙனம் அறியும் பொருளுக்கு அறிவும் அறிவதற்குரிய முயற்சியும் எங்ஙனம் உண்டாகும்?

அந்த அறிவினால் அது எங்ஙனம் அறியும்? அறிந்து பெறும் பயன் யாது? என்றெல்லாம் வினாக்கள் தோன்றின. அந்த வினாக்களை முறையாகக் கேட்டுக் கொண்டு நாங்கள் சிந்தித்துப் பேசிய முடிவுகளை இனி வருகின்ற பகுதிகளில் கூறுகின்றேன்.

# இ. 1-2. முதல்வன் அறிந்து அனுபவிப்பவனா?

மறுநாள் வழக்கம் போல் கூடிப்பேசினோம். நண்பர்களுள் ஒருவன் முதல்வன் பேரறிவுடையவனல்லவா? அவன் மற்றைய இரண்டு பொருள்களையும் அறிவதற்கும் அனுபவிப்பதற்கும் உரியவனல்லவா? என்று கேட்டான். அவனுக்கு நான் பின்வருமாறு விளக்கம் கூறினேன்.

ஞாயிறு ஒளியுடையது. அதன் ஒளி ஏனைய சந்திரன் நட்சத்திரங்கள் ஆகியவற்றின் ஒளியைக் காட்டிலும் மிகப்பெரியது. இருட்டு ஒளியில்லாத பொருள். இருட்டு என ஒரு பொருள் உண்டு என்பது சந்திரன் ஒளியில் நட்சத்திரங்களின் ஒளியில் விளங்குவது போல ஞாயிற்றின் ஒளியில் உண்டு எனக் காணப்படுமாறு விளங்குவதில்லை; இல்லையென்று சொல்லும் படியாய் மடங்கி விடுகிறது. அது போல இறைவன் பேரறிவு உடையவன். பாசங்களாகிய மாயாகாரியப் பிரபஞ்சம் சிறிதும் அறிவில்லாத பொருள்கள்.

பேரறிவுடைய இறைவன் முன்னே இவை உண்டு என்னும் படியாய் விளங்கித் தோன்றா. பேரறிவுடைய இறைவனுக்கு இவற்றை அறிந்து அனுபவிக்க வேண்டிய நிலை இல்லை. எனவே முதல்வன் பாசப் பொருள்களை அறிய மாட்டான் என முடிவு செய்யலாம்.[1] என்று நான் என் நண்பர்களுக்கு விளக்கம் கூறினேன்.

---

1. *சிவஞானபோதம் ஏழாஞ்சூத்திரம் ''யாவையும் சூனியம் சத்தெதிர் ஆதலின் சத்தே அறியாது'' என்னும் பகுதி இங்கு விளக்கப்பட்டது.*

# இ. 1-3. தளைகள் அறிந்து அனுபவிக்குமா?

தளைகள் மற்ற பொருள்களை அறிந்து அனுபவிக்குமா? என்று ஒரு நண்பன் கேட்டான். அவனுக்குப் பின்வருமாறு விளக்கம் கூறினேன்

தளைகள் அறிவில்லாத பொருள்கள். அவைகளுள் மாயை என்னும் தளை உலகமாக, உடலாக, கருவிகளாக இருக்கின்றது. அவைகளுக்குத்தனியான அறிவு இல்லை. உயிருடன் கூடினால் அறியும் கருவிகளாக இருக்கும். ஆகவே ஒரு வகையில் மாயாகாரியமான கருவிகள் அறிவுடையன என உபசாரமாகச் சொல்லலாம். அவை முதல்வனை அறியுமா என்றால் அறியா. தவிர அவை தாம் கூடியிருக்கிற உயிரையாவது அறியுமா என்றால் அதனையும் அறியா. தம்மைத்தாம் அறியுமா என்றால் தம்மையும் அறியா; தாம் அறிகிறோம் எனவும் அறியாது.

ஆகவே தளை என்ற அசத்து முதல்வனையும் அறியாது, உயிர்களையும் அறியாது, ஆகவே அறிவு இல்லாதவகையிலே அசத்தான தளை மற்ற இருபொருள்களாகிய முதல்வனையும் உயிரையும் அறியமாட்டாது என முடிவு செய்யலாம்[1] என்று கூறினேன்.

---

1. *சிவஞானபோதம் ஏழாஞ்சூத்திரம் ''அசத்து இலது அறியாது'' என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

# இ. 1-4. உயிர் அறிந்து அனுபவிக்குமா?

முதல்வனும் அறிந்து அனுபவிக்க மாட்டான்; தளையும் அறிந்து அனுபவிக்க இயலாதது என்றால் மிச்சம் இருப்பது உயிர்தானே. அது அறிந்து அனுபவிக்கும் என்று முடிவு செய்து விடலாமே என்று மற்றொரு நண்பன் கூறினான். ஆம் - அவன் கூறியது பொருத்தமே. யானும் என் போலிய உயிர்களும் முதல்வனையும் தளைகளையும் அறியவும் அனுபவிக்கவும் உரிமை உடையோம். யான் கருவிகளாகிய தளையுடன் கூடியிருக்கையில் அக்கருவிகளை அறிவேன்.

மெய், கண் முதலாக அகங்காரம், சித்தம் வரை கருவிகளை நன்கு அறிவேன். மேலும் மற்ற பொருள்-ஆகிய முதல்வனை அறிவேனா என்றால் அவனையும் ஒருவகையால் அறிவேன். எப்படி என்றால் நான் கருவிகளோடு கட்டுப்பட்ட நிலையில் முதல்வனை அறிதல் இயலாது.

ஆனால் அந்தக் கட்டிலிருந்து நீங்கின பிறகு அவனோடு ஒன்றித்து நின்று அவனை அறியமுடியும். ஆகவே நானும் என்னைப் போன்ற உயிர்களுமே மற்ற இருபொருள்களாகிய முதல்வனையும் தளையினையும் அறிந்து அனுபவிக்கும் பொருள் என்று[1] சிந்தித்து முடிவு செய்தோம். ●

---

1. *சிவஞானபோதம் ஏழாஞ் சூத்திரம் "இருதிறன் அறிவுளது" என்னும் செய்தி இங்கு விளக்கப்-பட்டது. இதுவும் அடுத்து வரும் இரண்டு பகுதிகளும் ஏழாஞ்சூத்திரத்து மூன்றாம் அதிகரணங் கூறும் "இவ்விரண்டனையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டன்பாலும் உளதாய் உள்ள அதுவே அவ்வான்மாவாம்" என்னும் செய்தியை விளக்குகின்றன.*

# இ. 1-5. உயிர் அறிவது எதன் உதவியால்?

மறுநாள் கூடிப் பேசியபோது ஏனை இரண்டு பொருள்களையும் அறிந்து அனுபவிக்கும் உயிர் தானே அறியுமா? பிறிதொன்றன் உதவியால் அறியுமா? என்று ஒரு நண்பன் கேள்வி எழுப்பினான். அவனுக்கு உயிரின் அறிவு தானாய் அறியும் அறிவன்று; அது முதல்வன் உணர்த்தினால் மட்டும் உணரும் அறிவு என்று நான் விடைகூறினேன். உயிர் கட்டுப்பட்டுள்ள போதும்[1] அவன் உயிருக்கு உணர்த்துவான் கட்டு; நீங்கிய போதும்[2] உணர்த்துவான்; கட்டுப்பட்டுள்ள போதும் அவன் உணர்த்த நாம் உணர்கிறோம் என்பதை உயிர் அறியாது. எதுபோல என்றால் உயிர் உணர்த்த கண் உணர்கிறது. ஆனால் உயிர் உணர்த்துகிறது என்பதைக் கண் உணராததுபோல.

ஆனால் உயிர் கட்டுப் பாட்டிலிருந்து விலகியதும் முதல்வன் வேறு கருவிகளின் தொடர்பில்லாமல் உணர்த்துவான். அப்போது அவன் நேர்முகமான உதவி உயிருக்கு உண்டு. உயிர் கட்டுப்பட்டிருக்கையில் முதல்வன் கட்டுக்களாகிய கருவிகளின் மூலம் உணர்த்துவான். அக்கருவி கரணாதிகள் அசத்துப் பொருள்கள். எனினும் அவ்வசத்துப் பொருள்களின் உதவியால்தான் உயிர் அறிகிறது.

உதாரணமாக கண்ணின் மூலம் பார்க்கிறது. காதின்மூலம் கேட்கிறது. ஆகவே உயிர் கட்டுப் பட்டிருக்கும் நிலையில் அது அறிவதற்கு மாயாகாரியமாகிய கருவிகளும் உதவி புரிகின்றன. முதல்வனும் உதவி. புரிகின்றான் எனக்கொள்ளுதல் வேண்டும். எவ்வகையிலும் உயிர்தானே அறியும் அறிவுடையதன்று; அறிவித்தால் அறியும் இயல்புடையது என அவர்களுக்கு விளக்கிக் கூறினேன். ●

---

1. பெத்த நிலையில் 2. முத்தி நிலையில்

# இ. 1-6. உயிர் அறியும் போது எங்கே நின்று அறியும்?

உயிர் அறியும் திறன்பற்றி மறுநாள் என் நண்பர்களுக்கு மேலும் சில விளக்கம் கூறினேன்.

உயிர் சத்தாகிய முதல்வன் உதவியாலும் அசத்தாகிய தளையின் உதவியாலும் அறிகிறது என்றேன். அவ்வாறு அறியும்போது எங்கு நின்று அறிகிறது? உயிர் ஒன்றைக் காணும்போது அக்கண்ணாய் நின்றே காண்கிறது. ஒன்றைக் கேட்கும் போது அக்காதாய் நின்றே கேட்கிறது. மற்றைக் கருவிகளுடனும் அவ்வாறே நின்று அறிகிறது. ஆகவே அசத்தோடு நின்று அசத்தினால் அறிகிறது!

இனி சத்தின் உதவியைக் கொண்டு அறியும் போது எவ்வாறு நிற்கும் ?

உயிரும் சத்தாகிய முதல்வனும் அறிவுப் பொருள்கள். உயிர் அறியும் போது அவன் அறிவாகவே நிற்கும். உயிர் தனியாக நின்று அறியும் ஆற்றல் இல்லாதது. எக்காலத்தில் எதனை அறிகிறதோ அக்காலத்தில் அதிலே நின்று அறியும்; எது போல எனில் பளிங்கு எதைச் சார்ந்து நிற்கிறதோ அதன் நிறத்தைப் பெறுவது போல; உயிரும் அசத்து சத்து இவ்விரு பொருள்களிலும் நின்று அவற்றின் தன்மைகளைப் பெற்றே அறிகிறது என விளக்கம் கூறினேன்.

## இ. 1-7. உயிர் சத்தா? அசத்தா?

மறுநாள் ஒரு நண்பன் தானே அறியாத உயிரை சத்து என்று சொல்வதா ? அசத்து என்று சொல்வதா? என்று ஒரு கேள்வியை எழுப்பினான். இது ஒரு நல்ல கேள்வியே. சிவஞானத்தை அறிவதில் என் நண்பனுக்கிருந்த ஆர்வத்தை இதுகாட்டுகிறது. அவனுக்குப் பின்வருமாறு விளக்கம் கூறினேன்.

முதல்வனும் உயிரும் அறிவுப் பொருள்கள். தளை அசத்து. ஆகவே உயிர் தளை ஆகாது. அது அறியும் பொருள். ஆயினும் முதல்வன் அன்று; உயிர் அறிவும் முதல்வன் அறிவும் வேறு வேறு.

முதல்வன் அறிவு முழுத்தன்மை பெற்றது. அதற்குக் கூடுதல் குறைதல் இல்லை. விளங்குதல் மறைதல் இல்லை. உயிர் அறிவோ அவ்வாறானதன்று. ஒருக்கால் கூடும் ; ஒருக்கால் குறையும் ; ஒருக்கால் ஒளிரும் ; ஒருக்கால் மறையும். ஆகவே உயிர் வேறு முதல்வன் வேறு. உயிர் சத்தும் அன்று; அசத்தும் அன்று.

இவ்விரண்டு பொருள்களின் நிலைகளுக்கு வேறாக உயிர் இருந்த போதிலும் உயிர் ஒரு காலத்தில் அறியாமல் இருக்கிறது. அப்போது உயிர் அசத்தாக இருக்கிறது. மற்றொரு காலத்தில் உயிர் சத்தாகவும் அறிகிறது. அப்போது அது சத்தாகும். ஆக இவ்விரு நிலைகளும் உயிர்க்கு உறும் காரணம் உண்டாதலால் உயிரை சதசத்து (சத்+அசத்து) என்று கூறலாம[1] என்றேன்.

---

1. *சிவஞானபோதம் ஏழாஞ்சூத்திரம் - "இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா" என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது. மேலும் இதன் விளக்கத்தை "சத்தசத் தறிவ தான்மா தான்சத்தும் அசத்தும் அன்று, நித்தனாய்ச் சதசத்தாகி நின்றிடும்" என்னும் சிவஞான சித்தியார் சுபக்கம் 247 ஆம் செய்யுளானும் அறியலாம்.*

தன்னைவிட்டுவிடும்படியும் கெஞ்சியது. பெரும்புலியோ அதனை விளித்து நீ ஆடு அன்று; புலி என்று சொல்லி இங்கே எப்படி வந்தாய்? என்று கேட்டது. அதற்கு அந்தக்குட்டி தான் ஒருக்காலும் புலி அல்ல என்றும் தன்னை விட்டுவிடும் படியும் மீண்டும் கெஞ்சியது.

ஆனால் புலி அதை விடவில்லை. அதனை இழுத்துச் சென்று நீர்க்குட்டையின் அருகில் நிறுத்தி அங்கே தோன்றும் வடிவங்களைக் காணும்படிச் சொல்லியது. அதற்கும் புலிக்கும் உள்ள ஒற்றுமையையும் அதற்கும் ஆடுகளுக்கும் உள்ள வேற்றுமையையும் உணர்த்தியது. அப்போதுதான் புலிக்குட்டி தான் வேறு இனம்; ஆடு வேறு இனம் என்று அறிந்தது.

மற்றும் அதனை நிரூபிக்க வேண்டிப் பெரும்புலி ஒரு ஆட்டைக்கொன்று அதன் குருதியைத்தானும் குடித்துப் புலிக்குட்டியையும் குடிக்க வைத்தது. அந்தக் குருதியைக் குடித்த உடன் தன் இனத்துப் பழக்கம் வந்தது. அன்று தொடங்கித் தான் ஆடு அன்று; புலி என உணர்ந்தது. ஏனைய புலிகளைப்போல விலங்கு-களைக் கொன்று தின்றுவாழ்ந்தது.

இக் கதையில் சொல்லப்படும் புலிக்குட்டியே உயிர், ஆடுகளே புலன்கள், ஏனைய ஆடுகளுடன் சேர்ந்து தானும் ஆடு என்று நினைத்ததுபோல் உயிரானது புலன்களுடன் சேர்ந்து தானும் புலன் என்று நினைத்தது. பெரும்புலி முதல்வனாகிய குரு, அப்புலிக் குட்டிக்குத் தன் இன வேற்றுமை உணர்த்தி அந்த இனத்துப் பண்புகளை நினைவூட்டியது போல் முதல்வன் உயிருக்கு அதன் இயல்பையும் அறிவித்துப் புலன்களினின்றும் அது வேறு என்பதையும் உணர்த்தித் தன்னுடன் ஒற்றுமைப்படக் காட்டுவான். இது ஆசான் உபதேசமாகும். இதுவே உயிரின் மீட்சி எனப்படும்.

# இ. 1-9. அறியும் விதம்பற்றி எழுப்பிக் கொண்ட கேள்விகளுக்கு முடிவான விடை

அறியும் விதங்களை ஆராயத்தொடங்கின போது மூன்று கேள்விகளைப் பிறப்பித்துக் கொண்டோம். அறிவது யார்? எவரால்? எப்படி? என்று கேட்டோம். முதல்வனை தளை அறியாது; உயிர் அறியும். தளை உயிரை அறியாது. உயிர் தளையை அறியும். ஆகவே சுட்டி அறிவது முதல்வனுமல்லன்; தளையும் அல்ல. உயிர்தான் அறியும் அதிகாரி.

அறியும்போது எவரால் அறியும் என்றால், முதல்வன் உணர்த்த உயிர் அறியும். அறியும் ஆற்றல் அவனே தருகிறான். எப்படி அறியும் என்றால் கருவிகளின் மூலம் கருவிகளின் உதவியைக் கொண்டு கருவிகளாகவே நின்று அறியும். அவனைக் காணும்போது அவன் அறிவாலே அவன் அருளினாலே அறியும். ஆகவே அறியும் போது உயிரின் தன்மை இருவேறு இயல்பு-களாக இருக்கிறது.

சத்து என்ற அறிவாகவும் அசத்து என்ற அறிவின்மை-யாகவும் இருக்கிறது. மேலும் அது சித சித்தாக இருக்கிறது. என்பனவே அறியும் விதம்பற்றி எழுப்பிக் கொண்ட கேள்விகளுக்கு விடையாகும். ●

---

*இதுவரை ஏழாஞ்சூத்திரப் பொருள் ஒருவாறு விளக்கம் செய்யப்பட்டது.*

# இ. 2. உயிராகிய நான் உண்மை அறிவைப் பெறுவது எவ்வாறு?

## இ. 2-1. முதல்வனே குருவாய் வருவான்

மறுநாள் நண்பர்கள் வழக்கம் போல் வந்து கூடினார்கள். இதுவரை கூடிப்பேசிய பேச்சுக்களால் நண்பர்களுக்குச் சிவஞானத்தை அறிவதில் ஊக்கம் உண்டாயிற்று என்பது அவர்கள் நாள்தோறும் வந்துகூடித் தொடர்ந்து இதுபற்றிக் கேள்விகள் கேட்பதாலும் நான் சொல்வதை ஆர்வத்துடன் கேட்டு ஏற்றுக் கொள்வதாலும் புலனாயிற்று.

ஒரு நண்பன் ஒரு கேள்வி கேட்டான். உயிர் தளையையும் அறியும். முதல்வனையும் அறியும் என்று சொல்கிறீர்களே! மாயாகாரியமாகிய உலகத்தை அறிவதுபோல முதல்வனை நாம் அறிய முடிவதில்லையே என்பதே அவன் கேட்ட கேள்வி. அவனுக்கு நான் பின் வருமாறு விடை கூறினேன்.

உயிர் முதல்வனை அறிய முடியாமைக்குத் தளையே காரணம். அத்தளையை அறுத்து அவனைக் காணும்படி செய்வது அவனுடைய அருளே. அவ்விதம் தளையை நீக்கி உயிர் அவனை அறியும் படிச் செய்வதற்கு அவனே வருவான்.

உயிரின் பக்குவத்தை அவனே அறிந்து உயிருக்கு வழிகாட்ட அவன் தோன்றுவான். அதற்குரிய காலமும் வரும். அப்போதுதான் கருவிகளால் மயங்கி நிற்கும் உயிருக்கு மயக்கம் தீரும். அப்போது தன்னையும் அறியும். முதல்வனையும் அறியும். அது எவ்வாறு நிகழும் என்பது பற்றி நான் உங்களுக்கு நாள்தோறும் தொடர்ந்து சிறிது சிறிதாகச் சொல்லுகிறேன் என்று தொடர்ந்து சொல்லி வரலானேன்.

# இ. 2-4. படிப்பினை

இந்த இரண்டு உதாரணங்களாலும் நாம் பெற்ற படிப்பினையை எடுத்துக் கூறுவோம். அரசகுமாரன் வேடனாக மயங்கி இருந்தபோது அரச உரிமை அவனிடம் இருந்தது. ஆனால் அரசனியல்பு காண-வில்லை. உயிர் கருவிகளின் கூட்டுறவில் வளரும் போதும் அப்படியே. தன் இயல்பை அறியாது கருவிகளின் இயல்பையே தனதென மயங்கியது கண்காண்பது; காது கேட்பது; மற்றவையும் இவ்வாறே தத்தமக்குரிய விடயங்களை அறியும். இவைகளை அறியும் அவ்வளவின் மேம்பட்டுத் தனக்கு அறிவு உண்டென அறியாது உயிர் மயங்கிக் கிடக்கும். கருவிகளுக்கு உயிரின் இயல்பை உணர்த்தும் ஆற்றல் இல்லை. முதல்வன் தான் உயிரின் இயல்பை அதற்கு உணர்த்த முடியும். உயிர் முதல்வனோடு முதல்வனாய் நின்று அறிய வேண்டும்.

ஆனால் அப்போதும் முதல்வனுக்கு இருக்கும் முழு அறிவும் தனதெனக் கொள்ளாது. எப்படி எனில் கதிரவன் முன் காணும் கண்ணும் கதிரவன் ஒளி தனது என்று மயங்காது அல்லவா. முதல்வன் உயிருக்கு நீ உயிர் அற்ற கருவி அல்ல; நீ அறிவுள்ளவன். என்பால் உள்ள பேரின்பத்தை அடையத்தக்கவன் என்று கூறுவன். அவ்வுணர்ச்சி உயிர் பெறும் தத்துவ அறிவு ஆகும்.

இவ்வாறு முதல்வன் உயிருக்கு உணர்த்தும் போது அவன் உயிருக்கு ஆசான் ஆகிறான். அவன் உயிரின் பக்குவத்தை அறிந்து உபதேசிப்பான்; பக்குவம் முற்றிய உயிர்களுக்கே அவன் இவ்வித உணர்வினைத் தருவான். அரசகுமாரன் அரசனால் தன் இயல்பு உணர்த்தப்

## இ. 1-8. அறியும் அதிகாரி யார்?

அறியும்விதம் பற்றி இதுவரை என் நண்பர்களுடன் பேசியதன் சுருக்கம் பின்வருமாறு :-

நானும் என் போலிய உயிர்களும், முதல்வனையும் தளையையும் அறிவோம். முதல்வன் தளையை அறியான். தளை முதல்வனை அறியாது. நான் அறியும் போது அவைகளை அவைகளின் உதவியால் அவைகளிலே நின்று அறிவேன். நான் அசத்தும் அன்று; சத்தும் அன்று - இருந்தாலும் ஒவ்வொரு காலத்தில் அறிவில்லாதவன் ஆகவும் மற்றொரு காலத்தில் அறிவுள்ளவனாகவும் இருத்தலால் எனக்கு 'சதசத்து' 'சிதசித்து' என்ற பெயர் உண்டு.

ஆகவே முதல்வனை அறிந்து பயன்பெறும் அதிகாரி நான்தான். எனவே நான் அசத்தின் பால் நின்று அசத்தினை அறிந்து அனுபவிக்கும் நிலையிலிருந்து விடுபட்டுச் சத்தின் பால் நின்று சத்தினை அறிந்து அனுபவிப்பதற்குரிய முயற்சியினை மேற்கொள்ளுதல் வேண்டும். ●

## இ. 2-3. குருவருள்

ஒரு மன்னன் வேட்டைக்குச் சென்ற போது அவனுடன் சென்ற அரசிளங்குமரன் வழிதவறிப் போய் வேடர் கூட்டத்தில் சேர்ந்து வளர்கிறான். நாளா-வட்டத்தில் தானும் ஒரு வேடன் என்று எண்ணி அவ்வேடர்களுடைய பழக்க வழக்கங்களையே மேற்-கொண்டு தன் இயல்பை மறந்து விடுகிறான். மற்றொரு முறை பல ஆண்டுகள் கழித்து அம்மன்னன் வேட்டைக்குச் செல்கிறான். அங்கே வேடர்கள் குழுவில் இளங்குமரன் இருப்பதை அறிகிறான், உடனே அவனிடம் சென்று அவனை விளித்து அவனுடைய உண்மை இயல்புகளை உணர்த்துகிறான். அவன் வேடன் அல்லன் என்றும் அரசகுடும்பத்தில் பிறந்தவன் என்றும் அரசனுக்குரிய எல்லா உரிமைகளும் அவனுக்கு உண்டு என்றும் உணர்த்துகிறான்.

இளங்குமரன் முதலில் தன் இயல்பை அறியாதிருந்தும் மன்னன் உணர்த்திய பிறகுஅறிந்து தன் உரிமைகளைப் பெறுகிறான். முன்சொன்ன புலிக்குட்டிக் கதையைப் போல் இங்கும் உவமை இருக்கக் காணலாம். அரசிளங்-குமரனே உயிர், வேடர்களே புலன்கள். மன்னனே முதல்வன். முதல்வனது சிவானுபவத்தைப் பெறுவதற்கு உரிமையுடைய உயிர் வேடர்களாகிய புலன்களிடையே அகப்பட்டு மயங்கித் தானும் புலன் என்று எண்ணுகிறது. அங்கே வெகுகாலம் உழன்று பக்குவம் அடைந்த போது அரசன் வேட்டைக்குச் செல்கிறதைப் போல முதல்வன் போதிப்பதற்குச் செல்லுகிறான். அப்போது அவன் ஆசிரியனாய் இருந்து அந்த உயிருக்கு அதன் இயல்பை உணர்த்துகிறான்.

அதுமுதல் தன் இயல்பும் இனவேறுபாடும் உரிமைகளும் அறிந்து உயிர் அறிவு பெறுகிறது. இதுவே ஆசான் அருள் அல்லது குருவருள்.

இக்குருவருளால் பாசமாகிய தளைகள் நீக்கப் பெறு-கின்றன. இதுவே குருஉபதேசம் ஆகும்.

---

1. சிவஞானபோதம் எட்டாஞ்சூத்திரம் "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத் தம்முதல் குருவுமாய்த் தவத்தனில் உணர்த்த" என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது. இதன் விளக்கத்தை

மன்னவன்தன் மகன்வேடர் இடத்தே தங்கி
வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ யென்றவரிற் பிரித்துப்
பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறுந்தொல் லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்தவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்

என்னும் சிவஞானசித்தியார் சுபக்கம் 253 ஆம் செய்யுளான் உணரலாம்.

# இ. 2-2. மீட்சி

இருள் அடர்ந்த ஒரு பெரிய சோலை. அதற்கு அருகே வெளிப்புறத்தில் ஒரு தோட்டம். அதிலே ஒரு ஆட்டுப்-பட்டி இருந்தது. அதிலே ஒரு ஆட்டு மந்தை அடை-பட்டிருந்தது. ஒரு நாள் அச்சோலையிலிருந்து ஒரு பெரிய பெண்புலி இரைக்காக வெளிவந்தது. அது நிரம்பிய கருப்பம் உற்றிருந்தது. ஆட்டு மந்தையைக் கண்டு வெகுமகிழ்ச்சி அடைந்தது. சோலையின் ஓரத்தில் ஒருபெரிய உயரிய பாறையின்மேல் நின்று அது ஆட்டு மந்தையைப் பார்த்தது

பசியின் வேகத்தினால் முன்பின் பாராமல் அப்பாறை-யிலிருந்து ஆட்டுப்பட்டிக்குள் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தது. பாய்ந்த வேகத்தில் அடிபட்டுக் கருப்பம் கலங்கிச் சிறுபுலிக்குட்டி வெளியே விழுந்தது. தாய்ப்-புலியோ விழுந்த அடியால் உயிர் துறந்தது. ஆனால் குட்டியோ ஊழ்வினையால் பிழைத்துக் கொண்டது. அப்புலிக்குட்டி அன்று முதல் ஏனைய ஆட்டுக் குட்டி-களுடன் வளர்ந்து வந்தது. ஆட்டுக்குட்டிகளுடனே பழகிவந்ததனால் தானும் ஓர் ஆட்டுக்குட்டி யென்றே மயங்கிப், புல்லும் நீரும் உண்டு வளர்ந்தது.

ஒருநாள் அதே சோலையிலிருந்து மற்றொரு பெரும்புலி ஆட்டு மந்தையைக் கண்டு அதில் புகுந்து ஆடுகளைக் கொன்று தின்னவந்தது. அங்கே ஆடுகளுடன் ஒருசிறு புலிக்குட்டி மேய்ந்து வருவதைக்கண்டு வியப்பு அடைந்தது.

இயற்கைக்கு மாறான அந்தச் செயலைக் கண்டு அதன் காரணத்தை அறிய அப்புலி விரும்பியது. உடனே மற்ற ஆடுகளைப் பிடிப்பதை விட்டு அச்சிறுபுலிக் குட்டியைப் பிடித்தது. அக்குட்டியோ தான் ஒருபாவமும் செய்யவில்லை என்றும், தான் ஓர் ஆட்டுக்குட்டி என்றும், இன்னும் பிழைத்திருக்க வேண்டும் என்றும்,

பெற்ற பிறகு நான் வேடனல்லன்; அரசனுடைய செல்வம் முழுவதும் பெற்று அனுபவிக்கக் கூடியவனே என்று உணர்கிறான். அதுபோல கருவிகளின் கூட்டுறவில் மயங்கிக் கிடந்த உயிர் முதல்வன் உணர்த்தின உடனே நான் உயிரற்ற கருவி அல்லன்; முதல்வன்பால் உள்ள பேரின்பம் முழுவதும் அனுபவித்தற்குரியவனே என்று உணரும் அது முதலே அது முதல்வனை நாடிச் செல்லும். அரச குமாரனும் வேடர் சேரியை விட்டு அரச அரண்மனைக்கு எப்படிச் செல்வானோ அதுபோல உயிர் முதல்வனை அடையும்.

ஆனால் இடம்விட்டு நீங்க வேண்டியிருக்காது. முதல்வன் எங்கும் நிறைந்தவனாய் இருப்பதால் கருவி-களின் இயல்பு தன்னியல்பு அன்று என்ற உணர்ச்சியே போதும். உணர்ச்சி பெறுவதற்குரிய செயல்களைச் செய்தலே அவனை அடையும் நிலையைக் காட்டுவது ஆகும்.

## இ. 2-5. உணர்த்துதல் பலவகை

உணர்த்துதலில் இருவகை உண்டு. ஒன்று முதல்வன் தன்னைப் புலப்படுத்திக் கொள்ளாமல் உயிர்தானே உணர்ந்தது என்னும் படியாய் உயிருடன் கலந்து நின்று உணர்த்துவது. அது உயிர் கருவிகளோடு கூடி அறியும் போது காணப்படுவது. இதுவரை நாம் கூறியது அதுவே.

மற்றொன்று உயிர் வினைப்பயனை அனுபவித்துக் கழித்துப் பக்குவம் அடைந்த போது முதல்வன் தன்னைப் புலப்படுத்திக் கொண்டு உணர்த்துவது. அப்பொழுது உயிர் தனக்கு முதலாகிய இறைவன் உணர்த்த நான் உணர்கிறேன் என அறியும் இங்ஙனம் உணர்த்துவதிலும் தன்மையில் நின்று உணர்த்துவது; முன்னின்று உணர்த்துவது; படர்க்கையில் நின்று உணர்த்துவது என மூவகை உண்டு.

இதற்குக் காரணம் உயிர்களைப்பற்றியிருக்கும் மலம் காரணமாக உயிர்களிடத்துக் காணப்படும் வேறுபாடேயாகும்.

ஒரு பள்ளியில் பல மாணவர்கள் படிக்கின்றனர் அவர்கள் பல திறப்பட்ட அறிவுடையவர்கள். ஆசான் உணர்த்தும் போது எல்லாரும் எல்லாப் பாடங்களையும் ஒன்று போல அறிவதில்லை. ஆகவே ஆசான் அவர்களைப் பல வகுப்பினராகப் பிரித்து உணர்த்துவான். பக்குவத்திற்கு ஏற்றபடி வெவ்வேறு வகுப்புகளாய் அவர்கள் அமர்த்தப்படுவார்கள். சிலருக்குச் சுலபமாகக் கற்பிப்பான். சிலருக்கு அழுத்தமாகக் கற்பிப்பான், இவ்வாறே உயிர்களும் மலப்பிணிப்புக்கேற்ப மூவகைப்படும். உணர்த்துதலும் அதற்கேற்ற அளவில் இருக்கும்.

இம்முறையில் உயிர்கள் மூன்று வகுப்பினராகப் பிரிக்கப்படுவர். ஆணவம் என்ற ஒரு மலத்தோடு கட்டுண்டவர் விஞ்ஞானகலர் எனப்படுவர். இவர்-

களுக்கு மாயை, கன்மம் என்ற கட்டுக்கள் இல்லை. முதல்வன் உள்நின்று உணர்த்துவன். இதுவே தன்மையில் நின்று உணர்த்துதல் எனப்படும். இரண்டாவது வகையினர் ஆணவத்தோடு கன்மமும் சேர்ந்துள்ளவர்கள். இவர்கள் பிரளயாகலர். இவர்களுக்கு மாயைச் சார்பு இல்லை. இவர்களுக்கு உள்நின்று உணர்த்துந் தன்மை போதாது. முதல்வன் பிறையும், பாம்பும், கங்கையும், சடை முடி அணிந்த மூன்றுகண், நான்கு தோள், நச்சுக்கருப்புடையகழுத்து, மான் மழுவேந்தியகை ஆகியவற்றுடன் கூடிய வடிவில் முன்னின்று உண்ர்த்துவான். இதுவே முன்னிலையில் நின்று உணர்த்துதல் எனப்படும்.

மூன்றாவது வகையினர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களாலும் பிடிக்கப்பட்டவர்கள். இவர்கள் சகலர் எனப்படுவார்கள். இப்பிரிவில்தான் நாம் எல்லோரும் அடங்கி உள்ளோம். நமக்கு முதல்வன் உணர்த்தும்போது நூல்முகமாகவும் அனுபவமுகமாகவும் உணர்த்த வேண்டும். அவன் குருவடிவில் வந்து நமக்கு உபதேசிக்க வேண்டும். இதுவே படர்க்கையில் நின்று உணர்த்துவது எனப்படும்.[1] அவைகளை நாம் சிந்தித்துத் தெளிந்து உணர வேண்டும்.

இக்குரு உபதேசம் மேலே காட்டிய உதாரணக் கதைகளால் உணர்த்திய கற்பனை.

1. *சிவஞானசித்தியார் சுபக்கம் 254 ஆம் செய்யுள்*
*உரைதரும்இப் பசுவர்க்கம் உணரின் மூன்றாம்*
*உயரும்விஞ்ஞா னகலர்பிர ளயாகலர் சகலர்*
*நிரையின்மலம் மலங்கன்மம் மலங்கன்மம் மாயை*
*நிற்குமுதல் இருவர்க்கும் நிராதார மாகிக்*
*கரையிலருட் பரன்துவிதா சத்திநிபா தத்தாற்*
*கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம ஒப்பில்*
*தரையில்ஆ சான்மூர்த்தி ஆதார மாகித்*
*தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்*

*என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

# இ. 3. உயிர் முதல்வனை எவ்வாறு அறியும்?

## இ. 3-1. ஞானக்கண்

உயிர் முதல்வனால் தன் இயல்பு உணர்த்தப் பெறுகிறது. அவ்வாறு உணர்த்தப் பெற்றதும் அது முதல்வனை நாடுகிறது, முதல்வனோ முழு அறிவுப் பொருள். அதாவது சித்துப் பொருள். அதனைக் குறைந்த அறிவு ஆகிய உயிர் அறிவு அறியாது உயிரின் கலப்பினால் சிற்றறிவு காட்டும் கருவி அறிவினாலும் அறியமுடியாது. ஆகவே முதல்வனைக் காண இவ்விரு சிற்றறிவுகளால் முடியாது.

பின்னர் வேறெந்த ஞானத்தால் அவனை அறிய முடியும்?

முதல்வனுடைய ஞானத்தால் தான் அவனை அறிய முடியும். அதனை ஞானக்கண் என்பர். அதுதான் சிவஞானம் அல்லது முதல்வன் அறிவு என்பது. ஆகவே குருஅருள்பெற்ற உயிர் முதல்வன் அறிவின் உதவி-யினாலே அவனைத் தன்னுள்ளே சிந்தித்து அறிய வேண்டும்.[1]

---

1. *சிவஞானபோதம் ஒன்பதாஞ்சூத்திரம் "ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக்கண்ணினில் சிந்தை நாடி" என்னும் செய்தி இங்கு விளக்கப்-பட்டது.*

# இ. 3-2. கருவிகள் பயன்தரா என்று அறிந்து நீங்கினால் உயிரினுள்ளே சிவஞானம் தோன்றும்

முதல்வனை உள்ளே நாடிச்சென்றால் அவனை அடையலாம் என்றோம். அவ்விதம் நாடிச்சென்றால் உயிரைப் பிடித்து நிற்கும் பாசப் பொருள்கள் என்ன ஆகும் என்பதை ஆராயலாம்.

ஒரு பரந்த பாலை நிலத்தில் ஒரு பிரயாணி செல்லு-கிறான். காலமோ முதுவேனிற்காலம். கதிரவன் மிகக்-கொடுமையாக வெப்பத்தை வீசுகிறான். நிழல் தரும் படியான ஓர் இடமும் செடியும் இல்லை. அப்போது தாகத்தினால் வருந்திப் போகும் பிரயாணி எதிரே மணல் எடாரியில் என்ன காண்கிறான். சிறிது தூரத்-திற்கு அப்பால் அலை அலையாக அடித்துக் கொண்டு பரவுகிற நீர் நிலை போன்றதோர் தோற்றத்தைக் காணுகிறான். அதனைக் கண்டதும் மிக மகிழ்ச்சியுடன் முன்னே செல்லுகிறான். அந்த நீரைக் குடித்துத் தன் தாகத்தைத் தனித்துக் கொள்ளலாம் என்று விரை-கிறான்.

அவ்விதம் செல்லச் செல்ல அந்த நீர் நிலை அப்புறமாக அகன்று கொண்டே செல்லுகிறது. முன்னர்க் கண்ட இடத்தில் நீர் இல்லை. மணல் எடாரிதான் இருக்கிறது. பின் தெரிந்த இடத்திற்குப் பறக்கிறான். அங்கும் நீர் இல்லை. எடாரிதான் இருக்கிறது. அவன் கண்டது உண்மையான நீர் நிலையன்று. அது பேய்த்தேர்

எனப்படும் கானல் நீர். அது அவனுடைய தாகத்தைத் தீர்க்கப் பயன்படாது.

எனவே அவன் அதனை விட்டு நீங்கி நன்னீர் தேடிச் சென்று அடைவான். அதுபோல மாயா காரியங்களாகிய கருவிகரணங்கள் உண்மை அறிவினைத் தர-மாட்டா; இன்பந்தரமாட்டா; என அறிந்து நீங்கினால் அப்பொழுதே அந்த உயிரினிடத்துச் சிவஞானம் தோன்றும். அந்தச் சிவஞானமே உயிரின் பிறவித்-துன்பமாகிய வெப்பத்துக் குளிர்ந்த நிழல் போல் விளங்கும்.

இதனால் உயிரினிடத்துப் பாசம் நீங்குதலும் சிவம் விளங்குதலும் ஒன்றுக்கொன்று இடையீடின்றி நிகழும் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

---

1. *சிவஞானபோதம் ஒன்பதாஞ் சூத்திரம்' ஊனாத்-துணைத் தேர்த்தெனப் பாசப் ஒருவ'' என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

# இ. 3-3. சிவஞானத்தைப் பெற்ற உயிர் சிவனை உண்மையாக உணரும்

வேனிற்காலத்தில் மணல் வெளியில் செல்லுகிற பிரயாணி வெய்யிற் கொடுமையால் தவிக்கிறான். அப்போது அங்கே குளிர்ந்த நிழலைத் தரும் மரம் ஒன்று தென்பட்டால் அம்மரம் அவனுக்கு மிகுந்த குளிர்ச்சியைத் தந்து இன்பம் உண்டாக்கும். அதுபோல, பாசக் கூட்டங்களாகிய கருவிகளை மெய்யென்று கருதி அவற்றையே நாடியதன் காரணமாகப் பிறப்பு இறப்புகளில் அகப்பட்டுத் துன்பமுற்ற உயிர் அவை ஒரு நிலையில் நில்லாது மாறுவன என்று அறிந்து அவற்றை விட்டு நீங்கினால் அப்பொழுது அந்த உயிரினிடத்துச் சிவஞானம் விளங்கும்.

அது பிறவித் துன்பமாகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழல்போல இன்பத்தைத்தரும். அந்த ஞானத்தைப்-பெற்ற உயிர் சிவபரம் பொருளை உண்மையாக உணரும்.[1]

---

1. *சிவஞானபோதம் ஒன்பதாஞ் சூத்திரம் ''தண்ணிழ-லாம்பதி'' என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

# இ. 3-4. சிவபரம் பொருளை உண்மையாக உணர்ந்த உயிர் அந்நிலையில் உறைத்து நிற்றற்குச் செய்ய வேண்டுவது யாது?

உயிர் குறையறிவுடையது ; மறந்து மறந்து அறிவது என்று முன்னமே சொன்னேன். அத்தகைய உயிர் இப்பொழுது பெற்ற மிக் அரிதாகிய சிவஞானத்தையும் மறந்துவிடுமல்லவா? அங்ஙனம் மறவாமல் பெற்ற சிவஞானத்தில் உறைத்து நிற்பதற்கு அவ்வுயிர் என்ன செய்தல் வேண்டும் என்பது பற்றி இப்பொழுது சொல்கிறேன்.

முதல்வனை அறிந்து அவனுடைய சொரூபத்தைக் கண்ட உயிர்பின் வீணே காலங்கழித்தால் பழைய நினைவு வந்து தாக்கும். அதனால் சிவபரம்பொருளை உணர்ந்த உணர்வினை இழந்துவிடும். அதை இழக்காத வண்ணம் ஓர் உறுதிப்பாட்டில் அவ்வுயிர் இருக்க வேண்டும். அதற்கு உபாயமாக இருப்பது இறைவனது திருப்பெயராகிய திருஐந்தெழுத்தேயாகும் அதனைச் சாதனமாகக் கொண்டு உச்சரித்தால் பழைய பாச நிலைக்கு உயிர் ஏகாது.

இப்படியும் மறந்து போகுமா என வியந்து கேட்கலாம் நாம் ஒரு நூலைப்படிக்கிறோம். அதிலுள்ள செய்திகளை நம் நெஞ்சில் நிறுத்திக் கொள்ள முயல்கிறோம். அது சிலபோது முடிகிறதில்லை. அடிக்கடி திடீரென்று மறந்து விடுகிறது. அதை விலக்குவதற்காகச் சில

சொற்களை மனனம் செய்து கொள்கிறோம். அவ்வாறு மனனம் செய்தால் படித்த செய்திகள் மறந்து போகா. அதுபோல உயிர் முதல்வனுடைய ஞான சொரூபம் கண்டும் பிறகு அதனை மறந்துவிடும் இயல்பு உண்டு. அதனைத் தடுக்கத் திருஐந்தெழுத்தை உச்சரிக்க வேண்டும்.

இந்தச் சாதனத்தினால் அக்காட்சி அழிவதில்லை. இவ்விதமாக ஐந்தெழுத்தை ஓதுவதைத் தகுந்த ஆசிரியனிடத்திருந்து தெரிந்து கொள்ளுதல் வேண்டும். ஆசிரியர் உபதேசித்தபடி அதனை உச்சரிக்க வேண்டும்.[1] ஐந்தெழுத்தே முதல்வனது உருவாகும் நிலையை உணரவேண்டும்.[2] இங்ஙனம் ஐந்தெழுத்தை உருஎண்ணுவதே கட்டு நிலை நீக்கி இறைநிலை கூட்டி அதில் நிலையாக நிற்பதற்கு உபாயமாகிய கருத்தைக் கொண்ட சாதனம் என்று உணர்ந்து உச்சரிக்க வேண்டும்.

1. சிவஞானபோதம் ஒன்பதாஞ் சூத்திரம் "விதி எண்ணும் அஞ்செழுத்தே" என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.

2. ஐந்தெழுத்தின் பெருமையை,
"அந்தம் ஆதிகள் இல்லாத அஞ்செழுத்து அருளினாலே
வந்தவாறு உரைசெய் வாரை வாதியா பேதி-
யாவே" (செய்-90)

என்னும் சிவப்பிரகாசத்தானும்,

"அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அச்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும்-அஞ்
செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத் தியும்" (செய் 44) என்னும் உண்மை விளக்கத் தானும் தேவார, மூவர் அருளிய நமசிவாயப் பதிகங்களாலும் பிறவற்றாலும் அறியலாம்.

# இ.3-5. சாதனம் செய்யாவிட்டால் பழைய நிலைவந்துவிடும்

கோழி குப்பையைக் கிளறிவிட்டு அதில் கிடக்கும் தானியமணிகளைப் பொறுக்கி எடுத்துத் தின்னும். மண்மீது தானியமணிகளைப் போட்டால் கால் விரல் களால் அம்மண்ணைக் கிளறிவிட்டே மறைந்திருந்த தானியமணிகளைப் பிரித்துப் பொறுக்கும். இந்தப் பழக்கம் அதற்கு இயற்கையாகி விட்டது ஆகவே ஒரு கற்பாறையின் மீது தானியமணிகளைப் போட்டாலும் அக்கோழி அப்பாறையைக் கீறிக் கிளறிவிட்டுத் தான் தானியத்தைக் கொத்தித் தின்னும். மணிகளை எடுக்கப் பாறையைக் கிளறவேண்டிய அவசியம் இல்லை அல்லவா? இருந்தாலும் பழைய பழக்கத்தினால் அவ்வாறு கிளறிவிட்டே கோழி மணிகளைப் பொறுக்குவதைக் காண்கிறோம்.

இதனால் பழக்கம் கொடிது என்றார் ஓர் அறிஞர். அப்பழக்கம் கருவிகளிடைப் பழகின உயிருக்கும் உண்டு. உயிர் முதல்வனைக்கண்டு அவனுடைய ஞான சொரூபத்தைக் கண்ட போதிலும் பின்னர்ச் சும்மா இருந்து விட்டால் பெருங்காயம் இட்டபானையில் காயத்தை முழுதும் எடுத்துவிட்ட போதிலும் காயத்தின் நாற்றம் இருத்தல் போல் உயிருக்குப் பழைய பாச ஞாபகம் வந்து பழைய நிலைக்குக் கொண்டு செலுத்தும்.[1] ●

---

1. *"இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்கு மாகலின் அதுநீக்குதற்கெனக்கொள்க" (சிவஞானபோதம்-சூ 9-ஆதி 3 ஏது) என்பது இங்கு விளக்கப்பட்டது.*

# ஈ. அறிந்தபின் உயிர் பெறுவது யாது?

## ஈ. 1. என்னைக் கட்டுப் படுத்தி இருக்கும் கட்டு ஒழியுமல்லவா?

### ஈ. 1-1. கட்டு ஒழிதல்

நான் முதல்வனை அறியக் கூடியவன். அவன் அருளாலே அவனை அறிந்தேன். அவ்வறிவு கெடாமல் இருப்பதற்கு ஐந்தெழுத்து என்ற சாதனமும் கைக்-கொண்டேன். இவ்வாறு நான் கொண்டதனால் என்ன பயன் அடைவேன் என்பதை இனி ஆராய வேண்டும்.

இப்படிப்பட்ட பயன் இருவகைப்படும் என்பர். ஒன்று உயிரின் கட்டு அல்லது பாசம் ஒழிதல். இது பாசவீடு அல்லது பாசநீக்கம் என்பது. இரண்டாவது சிவப்பேறு அல்லது முதல்வனைப் பெறுதல். இந்த இரண்டு பயன் களும் நான் பெறுவதாகும். அவை ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்பன.

இவ்விரண்டில் முதலாவதான கட்டு ஒழிதலை இனி ஆராய்வோம். இதனை ஆராயும்போது கட்டு ஒழிதலுக்கு இரண்டு விதமான செயல்களை உயிர் செய்தல் வேண்டும் எனத் தெரிகிறது. ஒன்று, முதல்-வனோடு ஒன்றாகி நிற்றல். மற்றொன்று, இறைவன் பணியில் சலிப்பின்றி நிற்றல். இந்த இரண்டையும் உயிர் செய்தால் இருவிதப்பயன்களைப் பெறும். முதல்வனோடு ஒன்றாகி நின்றால் உயிரைக் கட்டுப்-படுத்தியுள்ள மலம் அல்லது ஆணவம் நீங்கும்.

முதல்வனுடைய பணியில் நின்றால் வினைகளும் மாயையும் உயிரை விட்டு நீங்கும். ஆகவே இவ்விரு விதமான செயல்களிலும் உயிர் நின்று முயன்றால் அதனுடைய கட்டுக்கள் முழுதும் அற்றுப் போகும்.[1] இந்த ஆராய்ச்சி இதுவரை நாம் செய்த ஆராய்ச்சியின் தொடர்ச்சியேயாகும். அதனையே பின்னும் வற்புறுத்திக் கூறுவோம். ●

---

1. *சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரம் "ஏகனாகி இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

# ஈ. 1-2. ஒன்றித்து நிற்றல்

முதல்வனோடு ஒன்றித்து நிற்றல் என்பது அவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்றல் என்று பொருள்படும். ஒற்றுமைப்படுவதற்கு இரண்டு பொருள்கள் வேண்டும். அவை முதல்வனும் உயிரும். ஒரு பொருளேயாயிருந் தால் ஒற்றுமை வேண்டியதில்லை. இரண்டு பொருள் களும் ஒத்த இயைபு அடைந்திருக்க வேண்டும். இயைபும் பலவிதம். ஒற்றுமையும் பலவிதம்.[1]

கட்டுப்பட்ட நிலையில் முதல்வன் உயிரோடு வெளிப்-பட்டு விளங்காது கலந்து இருந்து - உயிரே அறிகிறது என்னும்படியாக அறிந்து அறிவித்து நிற்கிறான். அதுபோல, கட்டு நீங்கிய நிலையில் உயிர் முதல்வனோடு தான் எனத் தனிஒரு முதல் இல்லையென்னும்படிக் கலந் திருந்து அறிய வேண்டும். இதுவே சைவ சித்தாந்தம் கூறும் ஒற்றுமை. ஆகவே உயிர் அறிவதில்லை. தொழிலைச் செய்வதில்லை. முதல்வனே செய்கிறான் என்ற எண்ணம் வருமாயின் அதுவே ஒன்றித்து நிற்றல் ஆகும்.

பொறுப்பு எல்லாம் அவனுடையதே என்று தெளிவாக அறிவதே அதுவாகும். அவ்விதம் முதல்வனோடு ஒன்றித்து நின்றால் அதனால் அடையும் பயன் மலநீக்கம் ஆகும். ஆணவம் போய்விடும். யான் எனது என்ற எண்ணங்கள் தொலைந்துவிடும். யான் எனது என்ற எண்ணங்களே ஆணவநிலையைக் காட்டுவன.[2]

---

1. *ஒற்றுமை பலவிதம் என்பதனைச் சிவஞான மாபாடியம் சூ-10ல் காண்க*

1. *குடம் உடைந்தவழிக் குடாகாயமும் மகாகாயமும் போல ஒன்றாதல்*

2. *கிளிஞ்சிலை வெள்ளி என்பது போலத் திரிவுக் காட்சியான் ஒன்றாதல்*

3. மண்ணே குடமாதல் போல ஒன்று திரிந்து ஒன்றாய் ஒற்றுமைப்படுதல்

4. வெண்டாமரை-வெள்ளையும் தாமரையும் போலக் குண குணித்தன்மையான் ஒன்றாதல்

5. தீயும் இரும்பும் போல ஒன்றின் ஒன்று விரவு-தலான் ஒன்றாதல்

6. பாலும் நீரும் போலப் பிரிக்கப்படாத சையோகத்தான் ஒன்றாதல்

7. கருடனும் மாந்திரீகனும் போலப் பாவனை மாத்திரத்தான் ஒன்றாதல்

8. காய்ச்சப்பட்ட இரும்பில் நீர் போல ஒன்றின் ஒன்று லயமாய் ஒன்றாதல்

9. பேயும் பேய்பிடிக்கப்பட்டவனும் போல ஆவேசத்தான் ஒன்றாதல்

10. விறகில் தீப்போல வெளிப்பட்டு விளங்காமையால் ஒன்றாதல்

11. சூரிய ஒளியில் கண்ணொளி போலச் சத்தி கெட்டு நிற்றலான் ஒன்றாதல்

12. தலைவனும் தலைவியும் போல இன்ப நுகர்ச்சி மாத்திரத்தான் ஒன்றாதல்

13. நண்பர்களைப் போல நட்பின் மிகுதியான் ஒன்றாதல்

14. பசுவும் காட்டுப்பசுவும் போல ஒப்புமையான் ஒன்றாதல்

இவையெல்லாம் மற்ற சமயவாதிகள் தத்தம் கொள்கைக்கேற்பக் கூறும் ஒற்றுமைகள் எனச் சிவஞான முனிவர் எழுதியுள்ளார்.

2. சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரத்து முதல் அதி-கரணம் ''ஏண்டுப்பரமேசுவரன் இவ்வான்மாவாய் நின்ற முறையான் அவனிடத்து ஏகனாகி நிற்க என்றது. அவ்வாறு நிற்கவே யான் எனது என்னும் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையும் ஆகலான்'' என்னும் செய்தி இங்கு விளக்கப்-பட்டது.

## ஈ. 1-3. முதல்வன் பணியில் நிற்றல்

முதல்வனோடு ஒன்றித்து நிற்றல் மட்டும் போதாது. அவனுடைய பணியில் நிற்கவேண்டும். அதில் சலிப்பு கூடாது. இரண்டும் வெவ்வேறு காலங்களில் நிகழ வேண்டியதில்லை. ஒரே காலத்தில் நிகழலாம். விளக்கு பிற பொருள்களைக் காட்டுகிறது. ஆனால் அவ் விளக்கையே பார்த்துக் கொண்டிருப்பவனுக்கு அப்பிற பொருள்கள் தெரிவதில்லை. விளக்கு ஒன்றே தெரிகிறது. அதுபோல முதல்வனை நாடிக் கொண்டிருக்கும் உயிருக்கு அம்முதல்வன் தெரிவானே ஒழிய பிறபொருள்களாகிய பாசங்கள் தெரிவதில்லை. இப்படி அவனையே கண்டு, அவனருளேயெல்லாவற்றையும் செய்விக்கிறதென உணர்ந்து அவனருளாலல்லது ஒன்றையும் செய்யாது நிற்கும் நிலைதான் முதல்வன் பணியில் நிற்றல் ஆகும். இதுவே 'இறைபணி நிற்றல்' என்று கூறப்படும்.

இனி இறைபணி நிற்றலினால் உயிர் அடையும் பலன் என்ன? முன்னமே கூறியபடி கன்மமும் மாயையும் உயிரை விட்டு நீங்குவதே பயன். சாதனத்தில் நிற்கும் உயிருக்குத் தேகம் உண்டு. தேகம் இருந்தால் அவ்வுயிர் புது வினைகளைச் செய்யும். புது வினைகளைச் செய்தால் பின் வினைகளுக்கு வித்து ஏற்படும். அது முளைத்துப் பின்னும் வேறு வினைக்கு அடிபோடுகிறது.

ஆகவே எவ்வாறு வினைபோகும்? எனக்கேட்கலாம். அவ்வாறு வினைகளைச் செய்து கொண்டிருந்தாலும் அவ்வினை வித்து ஆகாமல் இருப்பதற்கு இறைபணி

நிற்றல் ஒரு சாதனமாகும். முதல்வனுக்கே என்னை முழுதும் சரணம் ஆக்கிவிட்டால் நான் செய்யும் வினைகள் அவனுடையனவே. ஆகவே அவை என்னைப் பற்றா. அதனாலே புதுவினையும் வித்தும் ஒன்று மில்லாமல் போகும். அவைகளோடு கன்மங்கள் ஒழியும்.[1]

---

1. *சிவஞானபோதம் பத்தாஞ்சூத்திரம் இரண்டாம் அதிகரணம் ''இனி இறைபணி வழுவாது நிற்க என்றது; அவனருளாலல்லது ஒன்றையும் செய்யா-னாகவே அஞ்ஞானகன்மம் பிரவேசியா ஆகலான்'' என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

# ஈ. 1-4. மூவகை வினையும் ஒழிவது எவ்வாறு?

வினை மூன்று வகைப்படும் என்றும் அவை சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் எனப்படும் என்றும் பிராரத் தத்தால் ஆகாமியம் வரும் ஆகாமியத்தால் சஞ்சிதம் வரும் என்றும் இவ்வாறே வினை ஒரு சுழற்சியாய் வித்தும் விளைவும் உணவும் மீதியும் போல வந்து கொண்டேயிருக்கும் என்றும் இவ்வினை காரணமாகப் பிறப்புகள் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கும் என்றும் முன்னே சொன்னேன்.

இறைபணி நிற்பவனுக்கும் உடம்பு இருக்கிறது.

உடம்பு இருக்கிற வரைக்கும் வினை செய்து கொண்டு தானே இருப்பான். இங்ஙனம் வினை செய்து கொண்டிருந்தால் ஆகாமியம் வளருமல்லவா? ஆகாமியம் சஞ்சிதமாகச் சேருமல்லவா? அங்ஙனம் சேரும் சஞ்சிதத்தில் ஒரு பகுதியைப் பிராரத்தமாக எடுத்து அனுபவிப்பதற்கு மீண்டும் பிறப்பு வருமல்லவா?

இந்நிலையில் வினை சேராமல் இருப்பது எவ்வாறு? பிறப்பு மீண்டும் வராமல் இருப்பது எவ்வாறு? என்பவை இங்கு நாம் மேற்கொள்ள வேண்டிய ஆராய்ச்சி.

ஆகாமியம் ஏறாதபடி பிராரத்தத்தை அனுபவிக்கும் வழியை அறிந்து கொண்டால் எடுத்த உடம்புடனே பிராரத்தம் அழியும். அதற்கு உபாயம்தான் முன் சொன்ன இறைபணி நிற்றல். நான் செய்கிறேன், எனது செயல் என்னும் முனைப்பின்றி அருளே செய்கிறது

என அருளில் அடங்கி நிற்பதனால் ஆகாமியம் ஏறுவதில்லை.[1]

ஆகாமியம் ஏறுவதில்லையெனவே சஞ்சிதமும் இல்லை. முன்னைப் பல பிறவிகளில் செய்து சஞ்சிதமாய்க் கிடந்த வினைகளுள் இந்த உடம்புக்கு எடுத்துக் கொண்ட பிராரத்தம் போக மீதமாயுள்ள சஞ்சிதம் இறைவன் குருவடிவாக வந்து செய்யும் தீக்கையினாலே வறுக்கப்பட்ட விதை முளைப்பதற்குப் பயன் படாதவாறு போலப் பிறப்புக்குக் காரணமாகாமல் அழிந்து போகும்.[2] இங்ஙனம் மூவகை வினையும்

---

1. *இந்திரியம் எனைப்பற்றி நின்றேயென் வசத்தின்*
   *இசையாதே தன்வரத்தே யெனையீர்ப்ப திவற்றைத்*
   *தந்தவன்றன் ஆணைவழி நின்றிடலால் என்றுந்*
   *தான்அறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான் தாள்கள்*
   *வந்தனைசெய் தவற்றின்வலி யருளினால் வாட்டி*
   *வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்கள் உண்டேல்*
   *முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகள்*
   *மூளாஅங் காளாகி மீளான் அன்றே*

   *என்னும் சிவஞானசித்தியார் சுபக்கம் 306ஆம் செய்யுளால் உணரலாம்.*

2 *சஞ்சிதவினை ஆசாரியன் தீக்கை செய்த மாத்திரையே எரிசேர்ந்த வித்துப் போலக் கெட்டொழிதலின்''*

   *(சிவஞானமாபாடியம் சூ-10-அதி-2.வெ 1)*

அவற்றின் வாசனையும் நீங்கும் என அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

---

"அவ்விறை பணியாகிய அடிமைத்திறம் உடையார் எவ்வுடம்பினின்று எவ்வினையைச் செய்யினும் அவை அவர்க்கும் பந்தமாதவில்லை. அவ்வாகாமிய வினையை அவிநாபாவமாய் உடன் கொண்டு வருவதாகிய பிராரத்த வினையும் தன்னைக் கூட்டுவிக்கும் முதல்வன் சந்நிதியில் உடலூழாய் ஒழிவதின்றி ஏனையோர்க்குப் போல அவர்க்கு ஆதலில்லை. (ஷி.........ஷி)

மற்றும்

"என்றவினை உடலோடு ஏகும் இடைஏறும்வினை தோன்றின் அருளே சுடும்" என்னும் திருவருட்-பயனும் (அதிகாரம்-10-குறள்-8) காண்க.

## ஈ. 1-5. வினையின் வலிமை

இனி என்னைவிட்டு நீங்கும் கட்டு என்ற பாசத்தின் வலிமையை அறிய வேண்டும். ஒரு துறவி கங்கைக் கரையில் தவஞ்செய்து கொண்டிருந்தான். வேனிற்காலம் வந்தது. கங்கையில் நீர் குறைந்தது. மணல்வெளி அதிகமாகி வெய்யில் சுடத் தொடங்கியது. துறவி பகலில் நீராடச் சென்றான். கால் அடி சுட்டது. அங்கே ஒரு மரத்தடியில் ஒரு சக்கிலியன் தன் செருப்பை வைத்துவிட்டு நீராடச் சென்றிருந்தான். துறவி அச்செருப்பைப் போட்டுக் கொண்டு நீராடிவிட்டு அதே இடத்தில் அதனை விட்டு விடுவதாக எண்ணி அதனை அணிந்து சென்றான். அவன் நீராடி விட்டு வருவதற்குள் சக்கிலியன் திரும்பிவந்து பார்த்துத்-துயரப்பட்டு விட்டுச் சென்றான். துறவி பிறகு வந்து செருப்பை அதே மரத்தடியில் விட்டுவிட்டுச் சென்றான். துறவி அனுமதியின்றிச் செருப்பை எடுத்த வினைக்காக அச்சக்கிலியனுக்கே மகனாகப் பிறந்தான்.

அச்சக்கிலியனுக்கும் ஊர்க்காவல் தொழில் உண்டு. ஒரு நாள் வேறு வேலையின் நிமித்தம் அவன் சென்றான். அப்போது தன் மகனை அத்தொழில் புரியும்படிக் கூறிவிட்டுச் சென்றான். துறவியாகிய முன்னினை-வுடனிருந்த மகனோ இரவில் ஊர்க்காவல் புரியும் போது ஒவ்வொரு யாமத்திலும் ஒவ்வொரு நீதி வாக்கியத்தைக் கூறிப்பறை அடித்துச் சென்றான். அதனைக் கேட்டுக்கொண்டிருந்த அரசன் மறுநாள் சக்கிலியனைக் கூவி நடந்ததை விசாரித்தான்.

மகன் செய்த பணியைக் கேட்டு வியந்து அவனுக்கு நூறு பொன்பரிசு அளித்தான். மகனும் அப்பரிசைத்

தான் தொடாமல் தகப்பனாகிய சக்கிலியனுக்குக் கொடுத்துத் தான் அனுமதியின்றிச் செருப்பு எடுத்த கடனுக்காக அதை எடுத்துக் கொள்ளும்படித் தந்தான். அந்த முறையில் தான் செய்தவினையைப் போக்கித் தன் முந்திய நிலையை அடைந்தான்.

---

(இக்கதையில் வினைக்கு வித்து ஏற்பட்டு விட்டது. அதனை அநுபவித்துப் போக்குகிறான் துறவி. பறையடித்ததால் வந்த பரிசுப் பொருளைத் தனக்கெனக் கொள்ளாததனால் விடுதலை கிடைத்தது. என இக்கதையின் மூலம் அறிந்து கொள்ளுதல் வேண்டும்)

# ஈ. 2. பிறகு உயிர் முதல்வனை அடையுமல்லவா?

## ஈ. 2-1. ஒப்பற்ற நோக்கம்

இதுவரை உயிர் அடையும் பாச விடுதலையைப் பற்றிச் சொன்னோம். இனி இரண்டாவது பயனாகிய முதல்வனை அடையும் பேற்றைப் பற்றி ஆராய்வோம். கட்டு உயிரை விட்டு நீங்கவே உயிர் முதல்வனை அடைய வேண்டும்.

இவ்விரண்டு பயன்களுக்குமிடையே என்ன வேற்றுமை என்று கேட்கலாம்.

கட்டு நீக்கம் அல்லது பாசத்தின் விடுதலை என்பது இருட்டுப் போதலுக்குச் சமானம். இரண்டாவதான முதல்வன் பேறுஒளி வருவதற்குச் சமானம். ஒன்று எதிர்மறை; மற்றொன்று உடன்பாடு என அறிய-வேண்டும். முதல்வனை அடைதலே உயிரின் சிறந்ததும் ஒப்பற்றதுமான நோக்கம். இதனைப் பெறுதலையே ஒவ்வொரு உயிரும் விரும்புகிறது. இதனை அடைதலில் தோன்றும் சிலகருத்துக்களை எடுத்துக் கூறுவாம்.

# ஈ. 2-2. நிட்டை கூடுதல்

இருள்போன்ற கட்டாகிய பாசம் நீங்கினதும் உயிரான நான் முதல்வன் திருவடியை இச்சித்து நாடுகிறேன். அஃது உடனே கிடைத்து விடும் என்று சொல்ல-முடியுமா. அத்தனை எளிதில் கிடைத்துவிடும் என்று சொல்வதற்கு இடம் இல்லை.

ஒரு குருடன் யாதோ ஒரு அற்புதத்தால் கண்ணைப் பெறுகிறான் என்று வைத்துக் கொள்ளுவோம். கண்ணைப் பெற்றவுடன் தான் காணும் காட்சிகளின் உண்மை நிலையை அவன் அறிய முடியுமா? முடியாது.

தான் காணும் காட்சிகளைப் பல தடவை பார்த்துப் பார்த்துப் பழகிய பிறகுதான் அவற்றின் உண்மை நிலை அவனுக்குத் தெரியும். கண் திறந்தவுடனே ஆனந்தத்தினால் ஏற்படும் திகைப்புத்தான் அவனுக்கு முதலில் தோன்றும். ஆகவே பாசம் நீங்கினது மாத்திரம் போதாது. இறைவனை அடையும் பேற்றிற்குப் பல முயற்சிகளும் செய்தல் வேண்டும்.

நான் தெருவில் ஒருநாள் ஏதோ ஒரு காரியமாகப் போகிறேன். என் எதிரில் நான் முன் அறிந்த ஒரு நண்பன் வருகிறான். சில சமயங்களில் நான் கண்களை விழித்துக் கொண்டு சென்ற போதிலும் அந்நண்பன் உருவம் என் மனத்தில் படுவதில்லை. நான் பாரா முகமாய்ப் போகிறேன் என்று எண்ணுகிறான் அந் நண்பன். உடனே அந்நண்பன் என்னைத் தட்டிச் சுட்டிப் பேசிய பிறகு தான் அவனை இன்னான் என்று அறிகிறேன்.

இது உலகவழக்கு, நாம் அடிக்கடி அனுபவிப்பதே. கண்தெரிந்தும் நான் காணவில்லை. இதைப்போலவே

பாசம் நீங்கியும் உண்மை நிலையை உயிர் அறிவதில்லை. இவ்வாறு அறிவதற்கு அதில் உறுதியாக நிலைத்து நிற்றலாகிய நிட்டை கூடுதல் வேண்டும் என்க.

ஒரு விறகுவெட்டி நாள்தோறும் காட்டிற்குச் சென்று விறகு வெட்டி விற்றுப் பிழைப்பது வழக்கம். அவனுக்கு வயிறு நிறையக் கஞ்சி கிடைப்பதே அரிது. எப்போது நல்ல வாழ்வு கிடைக்குமோ என்று ஏங்கி இருப்பான்.

ஒருநாள் அவன் எதிரே ஒருதுறவி தோன்றி அவனைப் பார்த்து இக்காட்டிற்கு உள்ளே செல் என்று போதித்தார். அப்படியே அவன் உள்ளே சென்று பார்க்கத் தேக்குமரம் கிடைத்தது. அதனை வெட்டி விற்று அதிகப்பணம் பெற்றான். துறவி உள்ளே செல் என்று சொன்னாரே தவிரத் தேக்குமரம் கிடைக்கும் என்று சொல்லவில்லை.

ஆகவே இன்னும் உள்ளே செல்வோம் என்று ஆலோசித்து மீண்டும் உள்ளே சென்றான். அங்கே ஈட்டிமரம் கிடைத்தது. அதை விற்று இன்னும் அதிகப் பணம் பெற்றான். அவ்வாறே மீண்டும் உள்ளே செல்ல சந்தனமரம், இரும்பு, ஈயம், வெள்ளி, பொன், மணி இவைகள் கிடைத்தன. சலிக்காமல் உள்ளே செல்லச்-செல்லப் பெரும் பொருள் பெற்றான். அவ்வாறே உயிரும் உண்மை அறிய முயற்சிக்க வேண்டும். முதல்வன் பேறு அடைவதற்கு இவ்வித நிட்டை முயற்சி வேண்டும். ●

# ஈ. 2-3. இருவகை உதவிகள்

உயிரானது காட்டக்காணும் தன்மை உள்ள கண்ணுக்கு ஒரு பொருளைக் காணும்படிக் காட்டுவதற்கு அதனோடு கலந்து நின்று காட்டும். அதுபோல முதல்வன் உயிருக்கு ஒரு பொருளை அறியும்படிச் செய்ய அதனோடு கலந்து நின்று அறிவித்துத் தானும் அப்பொருளை அறிவான். உயிரானது இங்ஙனம் அம்முதல்வன் தன்னுடன் ஒன்றித்து இருக்கும் கலப்பை மறவாமல் கடைப்பிடித்துச் செய்கிற அன்பினாலே அம்முதல்வனுடைய திருவடி இன்பத்தை அடையும்.

முதல்வன் உயிருக்கு இரண்டு வகையில் உதவி புரிகிறான். ஒன்று அவன் உயிருக்கு உயிராக இருந்து அதன் அறிவை விளக்குகிறான். இது அவன் உயிருக்குச் செய்யும் காட்டும் உபகாரம். மற்றொன்று உயிர் அறிவோடு முதல்வன் அறிவும் சென்று பொருளை அறியும் பொருட்டு அப்பொருளில் போய்ப்பற்றுகிறது. இது அவன் செய்யும் காணும் உபகாரம்,

விளக்கொளி பொருள்களின் மேலே பட்டால் அப்பொருள்கள் தெரிகின்றன. கண் அப்பொருளைப் பார்ப்பதற்கு விளக்கு ஒளி கண் ஒளியோடு கலக்க வேண்டும். விளக்கு ஒளி இல்லாவிட்டால், கண் ஒளி இருந்தும் பயனில்லை. பொருள்கள் தெரியா. அப்படியே முதல்வனுடைய அறிவு உயிர் அறிவோடு ஒன்றிடாமல் இருந்தால் உயிர் அறிவு எதையும் அறியாது. முதல்வன் அறிவு இருக்கும் மட்டும் உயிர் அறிவு பயன்படும். இது முதல்வன் உயிருக்குச் செய்யும் காணும் உபகாரம்.[1]

---

1. *சிவஞானபோதம் பதினொராஞ்சூத்திரம், "காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்" என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

## ஈ. 2-4. பாசம் நீங்கிய உயிர் முதல்வனது இருவகை உதவிகளையும் அறிந்து மறவாது அன்பு செய்ய வேண்டும்

மேலே சொன்ன இருவித உபகாரங்களையும் முதல்வன் எல்லா உயிர்களுக்கும் செய்வான். பாசம் நீங்காத உயிருக்கும் நீங்கிய உயிர்க்கும் செய்வான். பாசம் நீங்காத உயிர்க்கு அ பாசப் பொருள்களை அறிவித்தும் அறிந்தும் உதவுவான். பாசம் நீங்கிய உயிர்க்கோ பாசப்பொருள் விஷயம் ஆகாது. அதனை உயிரும் அறியாது. அதன் பொருட்டு முதல்வனும் அறியான். ஆகவே உயிரால் அறிய நிற்பது முதல்வன் ஒருவனே. முதல்வனை அறியும்போது அவ்வுயிர் தன்னையும் அறியும்.

ஆகவே முதல்வன் அறிவித்தல், அறிதல் ஆகிய இருவித உபகாரங்களையும் உயிருக்குச் செய்வான். இவ்விரு உபகாரங்களையும் தான் பெறுகிறதென்று உயிர் அறியும். அதனை ஒரு பொழுது அறிந்தால் மட்டும் போதாது. மறந்துபோயின் அதன் அருள் விளக்கம் போய்விடும். ஆகையால் இவ்வுதவிகளைப் பாசநீக்கம் பெற்ற உயிர்கள் மறவாதிருத்தல் வேண்டும். அவ்வுதவிகளுக்காக முதல்வன் மீது இச்சை மிகுதல் வேண்டும். செய்த உதவியை மறத்தல் நன்றன்று.

உலகியலிலும் ஒருவனிடமிருந்து ஒருதவி பெற்றவர்கள் அவ்வுதவியை எண்ணி அதனைச் செய்தவன் பால் அன்பு செலுத்துகிறார்கள். அதுபோல் முதல்வனிடம் பாசம் நீங்கிய உயிர்கள் வைக்கும் நன்றியே இன்ப அன்பு ஆகும்.[1] ●

---

1. *சிவஞானபோதம் பதினொராஞ்சூத்திரம் "அயரா அன்பின் அரன்கழல் செலுமே" இனிப்பத்தியினால் மறவாது ஏத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது. (அதி-2-மேற்கோள்) என்னும் செய்தி இங்கு விளக்கப்பட்டது.*

# ஈ. 2-5. நிட்டையில் உறைத்து நிற்பவரே அவன் திருவடியை அடைவர்

சர்க்கரையை நாவின்மேல் இட்டால் அதன் சுவையை நா அறியும்; அனுபவிக்கும், ஆனால் அந்நாக்கு நோயுற்றிருந்தால் அதன் சுவையை அனுபவியாது. அதுபோல் முதல்வன் எல்லா உயிர்களிடத்தும் கலந்து இருந்தும் அவன் மீது அன்பு இல்லாத உயிர்கள் அவனை அறியமாட்டா. அவன்மீது அன்பு மீதூர்ந்தவர்கள் அவனை அறிந்து இன்பம் உறுவார்கள்[1] அவர்களே பாசம் நீங்கிய உயிர்கள். அவர்களே அவனுடைய திருவடிப்பேறு அடைவார்கள. மேலே சொன்ன நிட்டை அல்லது அன்பு இயக்கத்தில் உறைத்து நிற்பவர்களே அப்படிப்பட்ட பேறு அடைவார்கள். உடல் உள்ளபோதே இவ்வின்ப அன்பை அடைதலைச் சீவன்முத்தி என்று கூறுவர்

---

1. அருக்கன் நேர்நிற்பினும் அல்லிருளே காணார்க்கு இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன்-அருட்-கண்ணால்
பாசத்தைநீக்கும் பகல்அலர்த்தும் தாமரைபோல் நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர்-என்னும்
வெண்பாவுடன் (சிவஞானபோதம் சூ-11-அதி-2-உதாரணவெண்பா) இக்கருத்தை ஒப்பு நோக்கி அறியலாம்.

## ஈ. 3. முதல்வனை அடைந்த உயிர் உடம்பு உள்ளவரையிலும் செய்ய வேண்டுவது யாது?

### ஈ 3. 1. வாசனை

முதல்வனுடைய அருளால் மறத்தலைச் செய்யாத அன்பு நிலையாகிய நிட்டை கூடிய எனக்கு இனி என்ன வாய்க்கும் என்பது இறுதிக்கேள்வி. எனக்கு நிட்டை கூடி இருந்தும் என்னுடைய உடல் எனக்கு இன்னும் இருக்கிறது. இந்த நிலையே சீவன் முத்தி நிலை என்று முன்னே சொன்னேன்.

உடல் எனக்கு இன்னும் இருக்கிற நிலை என்னுடைய நிகழ்வினையை (பிராரப்தம்) இன்னும் அனுபவித்துக்-கழிக்காததினால் உண்டானது. நான் இனிமேல் புது-வினையாகிய விதை போடாமலும் இருக்க வேண்டும். அவ்வாறு இன்னும் எனக்கு இருக்கும் தற்போதைய வினை முடியும் வரையும் உடல் இருக்கும். அது நீங்கினவுடனே மேலும் உடல் இனி எனக்குவராது. மறுபிறப்பும் வராது. அந்த மேல்நிலை வரும் மட்டும் நான்மிக எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

பழக்கம் வெகுகொடியது என்று முன்பே ஒரு உதாரணத்தால் காட்டினேன். இப்பழக்கம் பல அளவற்ற பிறப்புக்களின் வாயிலாக ஏற்பட்டது. பெருங்காயம் வைத்திருந்த பானையில் அதை எடுத்து விட்டுப் பானையைக் கழுவின பின்பும் சிறிது காலம் அதன் வாசனை வீசும் என்று சொன்னேன். அதுபோல முந்திய பல பிறப்புகளில் கெட்டவர்களுடன் பழகிய பழக்கம் போவது அரிது.

கள்ளைக் குடித்துப் பழகிய ஒருவன் நல்ல சற்போதனை-யினால் அதை விட்டு விட்டபோதிலும் ஏதோ ஒருநாள் கட்கடைக்கு அருகில் சென்றபோது அவ்வாசனை அவனை இழுக்கும். அங்கே பழைய கட்குடி நண்பர்கள் இருந்தால் அவர்களுடைய போதனை மிகப்பெரிதாகி சற்போதனையை மறைத்து உதறிவிடும். உடனே தன்வயத்தன் ஆகாதபடி அவன் கட்கடைக்குள் சென்று குடிக்கத் தொடங்குவான். அத்தனை நாள் கொண்ட வைராக்கியமும் ஒருகணத்தில் தொலைந்து போகும். ஆகவே எச்சரிக்கை பலமாக இருக்க வேண்டும்.

ஒருநாள் சில செம்படவப் பெண்கள் மீன் கூடைகளை எடுத்துக் கொண்டு அடுத்த சந்தையில் மீன் விற்று வெறுங்கூடைகளைச் சுமந்து கொண்டு தம்வீடுகளுக்குத் திரும்பினார்கள். வரும் வழியில் பெரும் மழை வந்து விட்டது. நேரமும் மாலை நேரம். அருகில் தெரிந்த ஒரு தோட்டத்துச் சாலைக்குள் புகுந்து மழைக்கு ஒதுங்கினார்கள். வெகுநேரம் ஆகியும் மழை நிற்காத-தினால் அச்சாலையிலேயே படுத்துக்கொண்டார்கள். அச்சாலையில் தோட்டக்காரன் வாசனை மிகுந்த மலர்-களை எடுத்துக் கூடைகளில் நிரப்பி வைத்திருந்தான். அவ்வாசனையை மோந்த செம்படவப் பெண்களுக்குத் தூக்கம் வரவில்லை. இதென்ன பொறுக்க முடியாத வாசனை. இதனால் தூக்கமே பிடிக்கவில்லை என்று ஒவ்வொருவரும் முணுமுணுத்துக் கொண்டிருந்தார்கள்.

அப்போது ஓர் அனுபவம் முதிர்ந்தகிழவி ஆமாம் இந்த வாசனை பொல்லாதது. நம்மீன் கூடைகளை மூக்கின் அருகில் வைத்துக் கொள்வோம். அது இந்த வாசனையை அடித்துவிடும் என்று சொன்னாள். அடுத்த கணமே ஒவ்வொருத்தியும் தன் தன் மீன் கூடையை முகத்தருகே வைத்துக்கொண்டு அதன் பயனாகக் குறட்டை விட்டுக் கொண்டு தூங்கினார்கள்.

அப்பெண்களுக்கு நறுமணம் பொல்லாததாகி விட்டது. ஏனெனில் முன்னே மீன்வாசனை பிடித்துக் கொண்டு இருந்தபடியால், கிழவியின் வார்த்தை பண்டை வாசனைக்கு இழுத்துச் சென்றது. அதுபோல உயிர் முதல்வன் பாதம் அடைந்து விட்டது. ஆனால் உடல் இருக்கிறது. அந்த உடல் வினைப்பழக்கத்திலேயே பழகியிருந்தது. உலக விவகாரங்களில் ஏதாவது ஒன்றைப் பார்த்துவிட்டால் அவ்வுடல் அங்கே இழுக்கப் படும். அதுதான் இன்பம் என்று தவறுதலாய் நினைக்கும். ஆகவே அந்த வலைக்குள் சிக்கிக் கொள்ளக் கூடாது. மீன் நாற்றத்தைவிட்டு நறுமண வாசனையை அனுபவிக்கப் பழகவேண்டும். அது செய்தால் மீன் வாசனை இழுக்காது. அவ்வித நற்பழக்கம் எதனால் உண்டாகும் என்று கூறுகிறேன்.

---

1. *''மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்*
*சிறப்பிலார் தம்திறத்துச் சேர்வை அற''*
*என்னும் சிவஞானபோத வெண்பா (சூ-12-அதி-2)*
*வின்பொருள் இங்கு விளக்கப்பட்டது.*
*இது முதலாக வரும் பகுதிகளில் சிவஞானபோதம் பன்னிரண்டாஞ் சூத்திரம்*
*செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா*
*அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ*
*மாலற நேயம் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே*
*என்பதன் பொருள் விளக்கப்படுகிறது.*

## ஈ. 3-2. தொண்டருடன் கூடுதல்

ஆணவம், வினை, மாயை என்ற மும்மலங்களும் முதல்வனுடைய திருவடியைச் சேர ஒட்டாமல் தடுத்து நிற்பவை. அவைகளைக் கழித்து எறிந்து விட்டால்தான் அவன் திருவடி கிடைக்கும் என்று முன்னமே சொன்னோம். அவ்விதம் அவைகளை ஒருமுறை கழித்து விட்டாலும் பண்டைப் பழக்கத்தினால் அவைகள் என்னை மறுபடியும் இழுக்கும் ஆற்றல் உடையன என்றும் சொன்னோம். அவ்விதம் அதன் ஆற்றல் என்னை வென்று இழுக்காமல் இருக்க நான் கொள்ளக் கூடிய சாதனங்கள் எவை? என்பது பற்றிச் சிறிது கூறுகிறேன்.

பழக்கமே பெரிது என்று சில உதாரணங்களில் கண்டோம். அப்பழக்கம் விட்டு விலகினாலும் அது மீண்டும் வந்து அடையாமல் இருக்கும் பொருட்டு என்னைப் போன்ற பாசக் கட்டு நீங்கிய பெரியார்-களுடன் இணக்கம் கொண்டு அவர்களோடு கூடுதல் கொள்ள வேண்டும்.

ஞானம் இல்லாத பிறரோ அஞ்ஞானமே ஊட்டுவர். அறிவுடையோர்களோ தங்களைப் போலவே என்னையும் ஆக்குவார்கள். ஆகவே அவர்களுடைய இணக்கத்தினால் பழைய சகவாசதோஷம் என்னை அண்டாது. புதுவினைகளும் என்னை ஒட்டாது.[1] ●

---

1. ''பித்துப் பத்தர் இனத்தாய்ப் பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை மேவாவினை'' என்னும் சிவாஞனபோத வெண்பாப் பொருள் இங்கு விளக்கப்பட்டது.

# ஈ. 3-3. சமயச் சின்னங்கள்

சைவசமயச் சின்னங்கள் திருவெண்ணீறும், உருத்திராக்-கமும் ஆகும். அவை சமய நிலையை உணர்த்துவதற்கு இன்றியமையாதனவா என்ற கேள்வி வரும். உலக-விவகாரங்களாகிய உடல் முதலியவை இருக்கும் வரையில் முதல்வனை நினைவு ஊட்டும் முறையில் அவைகள் சிறந்தவைகளே.

சேரமான் பெருமாள்நாயனார் முன்னமே திருத்-தொண்டு செய்துவந்த பெரியார். அவர் அரசு உரிமை பெற்றுப் பவனி சென்றார். சாதாரண ஆளாக இருக்கும் பட்சத்தில் செருக்கு ஏற்படும். அவர் ஒருநாள் யானைமீது நகர்வலம்வரும் போது எதிரில் ஒரு வண்ணான் அழுக்குப் பொதிசுமந்து கொண்டு வந்தான். அவன் உடலின்மீது உவர்மண் ஊறி வெண்ணீறு பூசியதுபோல வெளுத்து இருந்தது. பெருமாள் அதனைக்கண்டு திருநீறு பூசிய முனிவர் என நினைந்து இறங்கி வந்து அவனை அடிவணங்கினார்.

இதுபித்தர் செயல்போல் தோன்றினும் திருநீற்றின் மீது வைத்த மதிப்பே அடியார் எண்ணத்தையும் முதல்வன் எண்ணத்தையும் கொண்டு வந்து ஊட்டியது. செருக்கு மறைந்தது. இதனால் திருவேடங்கள் முதல்வனிடத்து அன்பை உறுதிப்படுத்துவனவாகும்[1] என அறிந்து கொள்ளலாம்.

---

1. *திருவேடத்தைச் சிவமெனவே கண்டு வழிபட வேண்டும் என்பது (சிவஞானபோதம்-சூ 12-அதி-3) இங்கு விளக்கப்பட்டது.*

## ஈ. 3-4. சமயநிலையங்கள்

சமயச்சின்னங்களைப் போலவே சமயநிலையங்களும் உள்ளன. ஆலயம் முதலிய நிலையங்கள் முதல்வன் உருவவழிபாட்டிற்குப் பயன்படுவன. இவைகள் முழுதும் விடுதலை அடைந்த உயிர்களுக்கு வேண்டியதில்லை. ஆனால் உடல் கொண்டு உலகத்தில் இருக்கும் சீவன் முத்தர்களுக்கு வேண்டியவை. அந்நிலையங்களில் உள்ள சின்னங்கள் நினைவு ஊட்டும் முறையில் பெரும்பயன் அளிக்கும். அவைகள் சாதாரணமக்களுக்கு யாதொரு பயனும் அளிக்காமல் போனபோதிலும் பாசம் நீங்கியவர்களுக்கு மிகுந்த நன்மை பயக்கும்.

ஆகவே சமயச்சின்னங்களையும் சமயநிலையங்களையும் முதல்வனுடைய விளக்கம் மிகுந்த இடங்கள் என்று எண்ணி வழிபடுதலே சிறந்த பயன்தரும். [1] ●

---

1. சிவாலயங்களில் உள்ள திருமேனியைச் சிவமெனவே கண்டு வழிபட வேண்டும் என்பது இங்கு விளக்கப்பட்டது.

## ஈ. 3-5. இறுதி முத்தி நிலை

மேலே கூறியபடி முதல்வனது சின்னங்களையும் அவனது நிலையங்களையும் ஏற்றபடி அறிந்து வணங்கி அவன் அடியார்களுடன் உடன் உறைந்து அவர்களுக்குப்பணி செய்து ஒழுகினால் சீவன் முத்தன் வினைமுதலிய கட்டுக்களுக்குள் மறுபடியும் அகப்பட்டுக் கொள்ளான். இவ்வாறு புனிதமான வாழ்வு வாழ்ந்து உடல் நீங்கிய உடனே பிறப்பில்லாத பேறு அடைவான். முதல்வன் திருவடிகளில் அழியாத இன்ப அன்பு நிலை பெறுவான்.

இந்த மேன்மையான நிலை பெறுவதற்கு முதல்வனுடைய திருவருட்கருணையே காரணமாக இருந்ததினால் அந்நன்றியை அந்த உயிர் ஒருகாலும் மறவாது. அவ்விதம் மறவாத நன்றி அவனை வழிபடுதலாலேதான் செய்ய முடியும். அப்போது முதல்வனும் உயிரும் ஆண்டான் அடிமை என்ற சிறந்த நிலைகளில் இருப்பார்கள். இந்த முறையாக உயிருடைய பிரபஞ்ச யாத்திரை இருக்கிறது. இதனையே இங்கு ஆராய்ந்தோம்.

# உ. முடிபுகள்

இதுவரை நாங்கள் உரையாடியதனால் அறிந்த செய்திகளையும் அதன் பெருமையினையும் வாசகர்களுக்குத் தொகுத்துக் கூறுகின்றேன்.

மேலே பன்னிரண்டு பகுதிகளிலே நான்கு பெரிய கேள்விகளையும் 12 உட்பிரிவுக் கேள்விகளையும் கேட்டோம். நாமே அக்கேள்விகளுக்கு நம்மால் ஆனவரை விடைகளும் கூறினோம். அவ்விடைகள் கூறும் நிமித்தமாகப் பல உதாரணங்களையும் கதைகளையும் சொன்னோம்.

இவ்வாராய்ச்சியிலே பல பிழைகளும் அறியாமைக் குற்றங்களும் இருக்கலாம். ஆனால் பொதுவிலக்கணங்கள் கூடிய மட்டில் அறிஞர்கள் கூறிய சொற்களைக் கொண்டே பேசப்பட்டன. இவைகள் எல்லாம் எமது சொந்தச் சிந்தனை கொண்டு ஆராயப்பட்டன என்று பெருமை பேசிக்கொள்ளவில்லை. முன்னோர்கள் முன்னமே தீட்டி வைத்திருக்கும் அருமையான படங்களை எமது கண்களுக்கு முன்னர் இருத்திக்கொண்டே இந்த ஆராய்ச்சி செய்யப்பட்டது. அத்தகைய படங்களைத் தீட்டித் தந்த ஒருவரைப்பற்றி இங்குச் சிறிது கூறுகிறேன்.

செந்தமிழ் விளங்கும் இத்தென்னாட்டில் அத்தமிழ் மொழியின் செம்மைக்கேற்பச் செவ்விய வண்டல் கொழிக்கும் பல செழுநீர் ஆறுகள் உண்டு. அவைகளில் ஒன்று நடுநாட்டின்[1] நடுவில் ஓடி இருபுறத்து நிலங்களிலும் செந்நெல்லும் கரும்பும் விளைவித்து மக்களைச் செம்மை நிலையில் வைத்துக் கொண்டிருந்தது.

---

1. *நடுநாடு - சோழநாட்டுக்கும் தொண்டை நாட்டுக்கும் இடைப்பட்டு இன்றைய தென்னாற்காடு மாவட்டம்.*

பல நூற்றாண்டுகளின் முன் அவ்வாற்றில் பெரும் வெள்ளம் வந்து அதன் கரையை உடைத்துக் கொண்டு வேறு ஒரு பள்ளமாக நிலத்தின் வழியாக ஓடிற்று. அதுமுதல் பழைய நீரோட்டவழி வெறும் மணலாறாகி நீர் ஓட்டம் இன்றிக் கிடந்தது. புது ஆறு பழைய பெயரான பெண்ணை என்ற பெயர்பெற்றது. பழைய ஆறு மலட்டாறு என்ற பெயர் பெற்றது. நீர் இன்றி மலடு ஆனதினால் இப்பெயர்பெற்றதென்பர் பலர். ஆராய்ச்சியாளர் சிலர் மலாடு[2] நாட்டு ஆறு என்பது மலாட்டாறு-மலட்டாறு என்று ஆயிற்றென்பர்.

அப்பெயரின் ஆராய்ச்சி எதுவாக இருந்த போதிலும் அவ்வாறு உண்மையில் மலட்டாறு அன்று. ஊற்றுத் தோண்ட அதிலிருந்து தெளிந்த நீர் ஓடி கிராமம் கிராமமாகப் பாய்கிறது. மண்டைக்கிணறு என்ற பெயர் பெற்ற ஊற்றுகளுக்கு அளவில்லை. இன்னும் இம்மலட்டாற்றிற்கு இருபுறங்களிலும் பைஞ்சாலி[3] யும் பசுங்கரும்பும் நீலியும்[4] அபரிமிதமாக விளைகின்றன. இதனருகில் பல ஊர்கள் செழித்தோங்கி வளருகின்றன. பாலிலிருந்து வெண்ணெய் எடுக்கிற எளிமையில் நிலத்திலிருந்து அருமையான நன்செய் விளைபொருள்களை எடுக்கின்றனர். அந்த எளிமையைக் கண்டோ அல்லது வேறு காரணத்தாலோ அங்குள்ள இந்த ஊருக்கு வெண்ணெய்நல்லூர் எனப்பெயரிட்டனர்.

---

2. *மலாடு - மலையமான்கள் என்ற சங்க காலத்துக் குறுநில மன்னர்களால் ஆளப்பட்ட பகுதி. மலையமான் நாடு என வழங்கிப் பின் 'மளாடு' என மருவிற்று. இன்றைய திருக்கோவலூர்ப்பகுதி.*

3. *சாலி - நெல்.*

4. *நீலி - நீலச்சாயம் தயாரிப்பதற்குப் பயன்பட்ட ஒரு தாவர இனம். 'அவுரி' எனவும் வழங்கும். இக்காலத்தில் இது பயிரடப்படுவதில்லை.*

இவ்வூர் மிகப்பண்டைநலம் பெற்றது. மிகவும் புனிதத் தலம். சுற்றிலும் சரிதச் சின்னங்கள் வாய்க்கப் பெற்றது. புண்ணிய சீலர்களின் அடிப்பொடி படிந்த ஊர். இதில் அழகிய கோயில் ஒன்று உண்டு. அது அருள்துறை என்ற பெயர் வாய்ந்தது. ஈசன் அம்மைக்கு அருள்புரிந்த ஐதீகத்தை அது காட்டுகிறதாம். பின்னால் அங்கு ஒரு அருள் புரியப்பட்டது. சுந்தர-மூர்த்திகள் திருமணத்தின் போது ஈசன் கிழவேதியராகி வந்து தடுத்து ஆட்கொண்டு அருள் புரிந்ததும் இக்கோயிலிலே தான்.

அதைப்பற்றித் திருத்தொண்டர்புராணம் மாத்திரம் அன்று இவ்வாலயத்துக் கல்வெட்டுகளும் கூறும். அப்போது சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது தேவாரம் ஆகிய தோத்திரம். பின் ஒருநாள் இங்கே ஒரு புகழ்பெற்ற வள்ளல் தோன்றினார். அவர்தான் சடையப்ப வள்ளல். அவர் செந்தமிழை வளர்த்த சீமான். கம்பநாட்டாழ்வாரை அரசர்கள் ஆதரியாமல் போக இந்த வள்ளல் ஆதரித்து இராமாயணம் என்ற சிறந்த இலக்கியத்தை ஆக்குவித்தார்.

மூன்றாவதாக சீவன் முத்தரான ஒருகுழந்தை இங்கே தோன்றி மெய்யைக்கண்டு மெய்கண்டார் ஆகி மெய்-கண்ட சாத்திரங்களில் முதன்மைபெற்ற சிவஞான போதம் என்னும் நூலை அருளிச் செய்தது சீடர்-களுக்கும் உபதேசித்துத் தமிழ் நாடெங்கும் சித்தாந்த சைவத்தை நிலை நிறுத்தியது. ஆகவே இவ்வூர் செந்-தமிழுக்குத் தோத்திரம் 'சாத்திரம், இலக்கியம் என்ற மூவகையாலும் ஒப்பு உயர்வு இல்லாத சிறப்பினைத் தந்திருக்கிறது.

வேறு எந்தத் தனி ஊரும் இத்தனைச் சிறப்பு தமிழ் நாட்டிற்குத் தந்ததில்லை. இம்மூன்றிலும் சாத்திரம் மிகச் சிறந்தது. அது வரையில் தமிழ் மொழியில் ஏன் உலகத்தில் எம்மொழியிலும் இல்லாத ஒப்பில்லாத சமய நூல் இங்கேதான் அருளப்பட்டது. அதுவும் ஒரு

சிறு குழந்தை என்றால் அஃது எத்தனை வியப்பு எனல் வேண்டும். இவ்வதிசயக் குழந்தை சமயஞானம் முழுதும் பன்னிரண்டு சிறு சூத்திரங்களிலே இயற்றி இருக்கிறது. அதில் அடங்காத சமயஞானம் இல்லை. அதனை விரித்துக்கூற விரும்பினால் எத்தனை வேண்டும் என்றாலும் கூறலாம்.

அதற்குப் பல உரைகள் உண்டு. சிற்றுரை ஒன்றும் பேருரை ஒன்றும் சிவஞானமுனிவரால் இயற்றப் பெற்றுள்ளன. அறிதற்கரிய கடினமான கருத்துக்கள் அவைகளில் உண்டு. அவைகளைப் படித்தவர்கள் அது இரும்புக்கடலை என்பர். ஆனால் அவ்விரும்புக் கடலையினையும் வேகவைத்துச் சுண்டல் ஆக்கி உண்ணமுடியும். அவ்வெளிய முறையில் இங்குச் சில இளைஞர்கள் பேச்சு வகையில் அதில் உள்ள உண்மை-களை எடுத்துக் கூறியிருக்கின்றேன்.

ஏனைய சமயத்தார்கள் தங்கள் சிறுவர்களுக்குப் பயன் படும்படித் தங்கள் சமயக்கொள்கைகளை எளிய-நடையில் எழுதி வைத்திருக்கின்றார்கள். அதனைப் பின்பற்றி சைவ சித்தாந்த உண்மைகளையும் இளைஞர் களுக்கு ஊட்ட வேண்டித்தான் கலந்து உரையாடலாக இந்நூல் எழுதப்பட்டது.

இதனால் சில இளைஞர்களாவது உண்மைகளை அறிந்து கொள்ளும் பட்சத்தில் அதுவே இந்நூல் வெளி-வந்ததற்குப் போதிய நன்மை ஏற்பட்டது என்பேன். இதனைப் பயன்படுத்திக் கொள்ள நம்நாட்டுச் சிறுவர்-கள் முயன்று ஏனையோர்களுக்கும் இதனைக்கூறுவார்-களாக.

சைவ உண்மைகள் ஒருசிறு தொகுதியினரிடத்து அகப்-பட்டுக் கொண்டு அலைமோதிக் கொள்வதைக்-காட்டிலும் பரந்த விரிவான உலகிற்குப் பயன் தர வேண்டும் என்பது முந்திய ஆசாரியர்களின் மேலான நோக்கம். அந்நோக்கத்தை ஒரு சிறிதளவாவது நிறை வேற்ற முயல்வதே எனது நோக்கமுமாம் என்க.

நந்தி அச்சகம் - கோவை - 43 ☎: 41395